# அன்னை பாலாவின் அற்புதங்கள்





நெமிலி எழில்மணி

வானதி பதிப்பகம்

# அன்னை பாலாவின் அற்புதங்கள்




"இசைக்கவிச் செம்மல்"
கவிஞர் நெமிலி எழில்மணி



வானதி பதிப்பகம்
13. தீனதயாளு தெரு
தி.நகர், சென்னை-17.

3-3

# பதிப்புரை

அன்னைக்குத்தான் தன்னுடைய பிள்ளைக்கு எந்த நேரத்தில் எதை, எப்படிக் கொடுப்பது என்பது தெரியும். ஆனால் அது பிள்ளைக்குப் புரியாது. எல்லை யில்லாத பிள்ளை மனம் அவளிடம் எதையெல்லாமோ தன்னுடைய தேவையென்று கருதி தேவையற்றதைக்கூடக் கேட்கும். இந்த நிலைதான் அண்ட சராசரங்களையும் தன் கைக்குள் வைத்திருக்கும் பராசக்திக்கும் பக்தர்களுக்கும் உள்ள தொடர்பு.

'அன்னை பாலாவின் அற்புதங்கள்' என்கிற இந்தப் புத்தகத்தில் கவிஞர் நெமிலி எழில்மணி இந்தத் தத்துவத்தை அழகாக விளக்கி உள்ளார்.

பரம்பொருளுக்கும் பக்தனுக்குமுள்ள பிணைப்பு பவித்ரமானது. அவளடி சார்ந்து, இறைஞ்சி வேண்டி நின்ற எவரையும் அவள் கைவிட்டதே இல்லை.

இந்தப் புத்தகத்தில் கவிஞர் குறிப்பிட்டிருக்கிற சம்பவங்கள் எல்லாம் என்றோ நிகழ்ந்ததல்ல; நம் காலத்தவர்களின் வாழ்க்கையில் மிகமிகச் சமீபத்தில் நடை பெற்றிருப்பவைகள். அன்னையின் மீது பக்தி ஏற்படுத்த இந்தப் புத்தகம் அளவுக்கதிகமாகவே முயலுகிறது.

அன்னை பாலாவின் அற்புதங்கள் என்கிற புத்தகத்தை வெளியிட வாய்ப்புத் தந்த கவிஞர் நெமிலி எழில்மணி, அச்சிட்ட ஸ்ரீ கோமதி அச்சகம், புத்தகத்தை வாங்கிப் பயனடையும் வாசக அன்பர்கள் எல்லோருக்கும் மனமார்ந்த நன்றி.

கருணைக்கடலான அன்னைபாலா திரிபுர சுந்தரியின் அருளுக்கு அனைவரும் பாத்திரராவோம்.

அன்புடன்
**வானதி ஏ. திருநாவுக்கரசு.**

# என்னுரை

அருள்மிகும் தேவி அன்னை பாலா திரிபுர சுந்தரியின் திருவிளையாடல்களை "திரிபுர சுந்தரி திருவிளையாடல்" என்ற அருட்புத்தகமாக வானதி வெளியிட அன்னை அன்பு செய்தாள்; அந்த எழுத்துக் களுக்கு என்னை அவள் கருவியாக்கியது நான் செய்த பெரும் பாக்கியமே!

அந்த நூல் வெளி வந்த பின்பு நடைபெற்ற பல அற்புதங்களையும், அப்போது எழுதுவதற்கு விடுபட்ட சில விளையாடல்களையும் "அன்னை பாலாவின் அற்புதங்கள்" என்ற இந்த நூலிலே கொண்டு வர அருள் பாலித்ததும் என் முன்னோர் செய்த தவப்பயனே.

அன்னையின் அருட் சன்னிதிக்கும் அன்பர்களின் பக்தி இதயங்களுக்கும் வானதி ஓர் ஆன்மீகப் பாலமாகத் திகழ்ந்து வருகிறது. புத்தக வித்தகர், இறைபணிச் செம்மல் வானதி திருநாவுக்கரசு அவர்கள் அன்னையின்பால் கொண்ட பேரன்பின் காரணமாகவும், பெரும் பக்தியின் காரணமாகவும் அழகாக இந்த நூலை அச்சிட்டுத் தந்துள்ளார்கள். நெமிலி ஸ்ரீ பாலா திரிபுர சுந்தரி பீடத்தின் சார்பிலும், எனது சார்பிலும் மனமலர்ந்து நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என்னை நூல் எழுதத்தூண்டியவர் எனது உடன் பிறவாச் சகோதரராக இருந்து எனக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்த பத்மஸ்ரீ இசைமணி டாக்டர் சீர்காழி எஸ். கோவிந்தராஜன் அவர்கள். இந்த நூலை எழுதும்போதும் அவர் அமரலோகத்திலிருந்து ஒவ்வொரு வரியினையும் பார்த்து என்னை ஊக்குவித்ததாகவே உணர்கிறேன். ஒவ்வொரு சம்பவமும் அன்னையின் கருணையால் அழகுற வெளிப்பட்டுள்ளது.

இந்த நூலை அமரர் பத்மஸ்ரீ இசைமணி டாக்டர் சீர்காழி எஸ். கோவிந்தராஜன் அவர்கட்கு காணிக்கை யாக்குகின்றேன்.

ஆன்மீக நேயர்கள் அன்னையின் அற்புதங்களை அறிந்து அருள் பெற வேண்டும் எனப் பணிவுடன் கேட்டுக் கொள்கிறேன்.

**நாளும் கோளும் ஏது? — சிவ**
**நாயகி துணைவரும் போது**

*22, சத்திரத் தெரு,*
*நெமிலி - 631 051*

அன்பன்
**நெமிலி எழில்மணி**

முருகா

டாக்டர் அருள்மொழி அரசு திருமுருக
கிருபானந்த வாரியார் ஸ்வாமிகளின்

# ஆசியுரை

## சாற்றுக்கவி – நேரிசை வெண்பா

*அன்னை நல் பாலாவின் அற்புதம் என்னும் நூல்*
*தன்னை எழுதி தருகின்றாள், பன்னும்*
*கவிஞர் எழில்மணி கந்த னருளாலே*
*புவி மீதில் வாழ்க பொலிந்து*

என் அன்பர், தேவி உபாசகர் நெமிலி கவிஞர் எழில் மணியவர்கள் செம்மனச் செம்மலாய் கவி பாடும் திறன் உடையவர்; உத்தம குணசீலர். திரு. சீர்காழி கோவிந்தராஜன் அவர்கட்கும், அவருடைய தவப்புதல்வர் சிவ சிதம்பரத்துக்கும், என் அன்புக்குரிய வானதி திருநாவுக்கரசுக்கும் நண்பராய்த் திகழ்பவர்.

இவர் அன்னை பாலாவின் அற்புதங்கள் என்னும் இனிய நூலைக் கனியமுதம் போல எழுதி விருந்தாகப் படைக்கின்றார்.

எல்லோரும் ஓதி உய்க

*5.6.91*
*சிதம்பரம் (முகாம்)*

அன்பன்
கிருபானந்த வாரி

## கருவூர் சித்தர் பாடலிலே
## ஸ்ரீ பாலாவைப் பற்றிய குறிப்பு

ஆதியந்தம் வாலையவள் இருந்தவீடே
ஆச்சரியம் மெத்தமெத்த அதுதான் பாரு
சோதியந்த நடுவீடு பீடமாகி
சொகுசுபெற வீற்றிருந்தாள் துரைப்பெண்ணாத்தாள்

வீதியந்த ஆறுதெரு அமர்ந்த வீதி
விளையாடி நின்றதிரு மாளி கண்டாய்
பாதிமதி சூடியே இருந்த சாமி
பத்துவய தாகுமிந்த வாமி தானே

ஓ! இது என்ன ஆச்சரியம். சித்தர் பாடல்கள் அமைந்தது எத்தனை ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னே? அதனை யாரறிவார்!

அந்த கருவூர்ச் சித்தர் பாடலிலே வரும் இந்தக் குறிப்பு பிரமிக்க வைக்கிறது.

நெமிலியிலே ஆற்றினை அடுத்த வீதியில் அமைந்திருக்கும் வீட்டிலே நடுக்கூடத்தில்தான் ஸ்ரீபாலா அமர்ந்திருக்கிறாள்.

எவ்வளவு தீர்க்கதரிசனமான இதனை கருவூர்ச் சித்தர் பல ஆயிரம் ஆண்டுகட்கு முன்னே எழுதிவிட்டார், கருவூர்ச்சித்தரின் ஒவ்வொரு வரியையும் நெமிலி ஸ்ரீ பாலா நிரூபித்து வருகிறாள்.

"கருவூரார் பூசை விதி" என்ற பாடல்களிலே தொடர்ந்து 30 கண்ணிகள் அமைந்துள்ளன. அத்தனையும் சிறந்த பொக்கிஷம்.

அதனை மிக அழகுற "சித்தர் பாடல்கள்" என்ற நூலிலே அன்பர்கள் காணலாம்.

அருள்மிகும் தேவி அன்னை பாலா தன்னைப் பற்றி பல ஆயிரம் ஆண்டுகட்கு முன்னே கருவூர்ச் சித்தரைப் பாட வைத்த அந்த அற்புதத்தைக் காணும் போது நமது மெய் சிலிர்க்கிறது.

காலத்துக்கெல்லாம் மூத்தவள் கன்னியான பாலா என எண்ணும்போது நெஞ்சிலே பரவசம் பரவுகிறது.

# நெமிலி ஸ்ரீ பாலா திரிபுர சுந்தரி

வட ஆற்காடு அம்பேத்கார் மாவட்டம் அரக்கோணம் வட்டம் நெமிலியிலே அருள்மிகும் தேவி அன்னை பாலா திரிபுர சுந்தரி அன்புமழை பொழிந்து ஆசிகள் வழங்கி வருகிறாள்.

திரிபுர சுந்தரிக்குப் பல திருக்கோயில்கள்: திருவான்மியூர், திரிசூலம், திருக்கழுக்குன்றம், திருவதிகை, சீர்காழி எனப்பல ஸ்தலங்கள்.

ஆனால் பாலாதிரிபுர சுந்தரியாக — சின்னஞ் சிறு பெண்ணாக — குழந்தை வடிவிலே குறைகளைத் தீர்த்து வருகிறாள் நெமிலியிலே! சுமார் நூறு ஆண்டுகள் முன்னாலே, சிவம் பெருக்கும் சீலர் — வைதீக மாமணி — நெமிலி ஸ்ரீ டி.கே. சுப்ரமண்ய ஐயர் கனவிலே தோன்றி "ஆற்றிலே வருவேன்! என்னை அழைத்துச் செல்" என்று ஆணையிட்டவள்தான் இந்த அழகு பாலா!

வெள்ளத்திலே தேடியபோது மூன்று நாட்கள் சோதித்து நான்காவது நாளிலே கிடைத்து கண்ணைப் பறிக்கும் வண்ண நிலவாகி — அவரது வீட்டையே

பீடமாக்கிக் கொண்டவள்தான் இந்தக் குழந்தை பாலா!

பல்லக்கு—ஒட்டகம், குதிரைகள்—சேவகர்கள், யானைகள் என சகல பரிவாரங்களும் புடைசூழ ஸ்ரீ காஞ்சிப் பரமாச்சார்யாள் 1945-ஆம் ஆண்டிலே நெமிலிக்கு வந்து மூன்று நாட்கள் அம்பாளின் பீடத்திலே தங்கி ஆனந்தமடைந்த அந்தப் பசுமையான நிகழ்ச்சி எல்லார் மனதிலும் சுவையாகப் பதிந்து விட்டது.

வைத்த விழி வாங்காமல் நெமிலி ஸ்ரீ பாலா திரிபுர சுந்தரியின் பேரழகைப் பருகிய ஸ்ரீ திருமுருக கிருபானந்த வாரியார் ஸ்வாமிகள் "இந்த பாலா திரிபுர சுந்தரி பீடத்திலே எல்லா தெய்வங்களையும் ஒரு சேரக் காண்கிறேன்'' என மெய்மறந்து கூறியதை வார்த்தைகளால் வர்ணிக்க இயலுமா?

மயிலை குருஜி ஸ்ரீ சுந்தர ராம ஸ்வாமிகள் "எனது குருநாதர் வள்ளிமலை ஸ்வாமிகளுக்கு பாலா திரிபுர சுந்தரிதான் இஷ்ட தெய்வம். இந்த பாலாவைப் பார்க்கும்போது எனது குருநாதரைக் காண்கிறேன்'' எனக் குதூகலம் பொங்கக் கூறியதை எப்படி விவரிப்பது?

திருவல்லிக்கேணி ஸ்ரீ பரம ஹம்ஸ புவனேஸ் வரி ஸ்வாமிகள் ஒவ்வொரு ஆண்டும் "பாலா திரிபுர சுந்தரி ஹோமம், ஸ்ரீவித்யா ஹோமம், ஸ்ரீ புவனேஸ்வரி ஹோமம்'' எனப் பல ஹோமங்களைப் புரிந்து நெமிலி ஸ்ரீ பாலாவின் திவ்ய தரிசனத்திலே மனம் களித்து நின்று மந்திரகோஷம் புரிந்து வருவதை விளக்கிக் கூற வார்த்தைகள் தான் போதுமா?

காளிகாம்பாள் தேவஸ்தான ஸ்ரீ சாம்பமூர்த்தி சிவாச்சாரியார் தமது சகதர்மிணியின் பிரார்த்தனைக்கு இரங்கி தமது இரண்டு புதல்விகளின் திருமணத்தை அன்னை நெமிலி ஸ்ரீ பாலா திரிபுர சுந்தரி முடித்து வைத்தாள் என்பதை அறிந்து நன்றியாக அந்த அன்னையின் சன்னிதியிலே "த்ரிசதி"யை முழக்கி அன்னையின் பீடத்திலே ஆனந்தக் கண்ணீர் வடித்து நின்றதை மறக்க இயலுமா? ஸ்ரீ சாம்ப மூர்த்தி சிவாசார்யாருடன் வந்த திருவேற்காடு ஸ்ரீ ராமதாச ஸ்வாமிகள் அன்னையின் அருளில் திளைத்து மனமெலாம் மகிழ்ந்து நின்ற அந்த மகோன்னதக் காட்சியிலே மயங்காதவர் எவர் இருக்க முடியும்?

கொடுவிலார் பட்டி ஸ்ரீசச்சிதானந்த ஆஸ்ரமம் ஸ்ரீ பரஞ்சோதி ஸ்வாமிகள் அன்னையின் சன்னதியிலே தீபாராதனைக் காட்சியைக் கண்ட வுடன் குலுங்கிக் குலுங்கி அழுது அம்பாளின் சன்னதியிலே உளமுருகிப் போனதை இன்றெல்லாம் வர்ணிக்கலாமே!

ஆஹா! அந்தச் சன்னிதியிலேதான் எத்தனை அற்புதங்கள் நடந்துள்ளன!

"எனது ஊமைப் பெண்ணுக்குத் திருமணம் செய்து வைக்க வேண்டும்" என்று வேண்டிய பாடகர் அமரர் கலைமாமணி கே. வீரமணி அவர்களின் குறையினை நீக்கிய அந்தச் சுவையான வரலாறும், "எனது பையனுக்குத் திருமணம் தள்ளிப் போகிறது கண் பாரம்மா பாலா" என வேண்டிக் கொண்ட ஏழிசை ஏந்தல் கலைமாமணி 'குன்னக்குடி வைத்யநாதனுக்கு, அருள்புரிந்த அற்புதமும்,"

“எனக்கு ஒரு திரைப்படம் கூட இல்லையே பாலா! நான் 45 நாட்களாக ஒருவித வேலையுமின்றி இருப்பதும் சரியா? தாயே! நீதானே என்னைக் காக்க வேண்டும்” என்று முறையிட்ட இசையமைப்பாளர் சந்திரபோஸ் வாழ்க்கையிலே அன்னை புரிந்த விளையாட்டும்,

இசைமணி பத்மஸ்ரீ சீர்காழி கோவிந்த ராஜனையும், கலைமாமணி கே. வீரமணி அவர்களையும் தனது பீடத்திலே பல ஆண்டுகளாகப் பாட வைத்த பாலா, ஒரு குறிப்பு தந்து அவர்களது மறைவை உணர வைத்த ஒரு பெரிய அதிசய நிகழ்ச்சியினையும்,

இன்னமும் பல பெரியோர்கள், பக்தர்கள், அன்பர்கள் ஆகியோர் வாழ்க்கையிலே அவள் புரிந்த அத்தனை அற்புதங்களையும் நாம் “அன்னை பாலாவின் அற்புதங்கள்” என்ற தொடராகக் காணலாம்! களிக்கலாம்!! சுவைக்கலாம்!!!

வாருங்கள்! அவளின் அருள் மழையில் நர்ம் திளைக்கலாம்!

வாருங்கள்! அவளின் கருணையில் நாம் களிக்கலாம்!

வாருங்கள்! அவளின் அற்புதங்களை நாம் அறிந்து மகிழலாம்.

‘அருள்மிகும் தேவி அன்னை பாலா’வின் பாடலைப் பாடி அகமகிழ்வோம்.

அருள்மிகும் தேவி அன்னை பாலா
திரிபுர சுந்தரி சரணம்
இருள்தனை நீக்கும் தாயே பாலா
திரிபுர சுந்தரி சரணம்
திரிபுர சுந்தரி சரணம் — பாலா
திரிபுர சுந்தரி சரணம்
(அருள் மிகும்)

மாரியைப் பொழியும் மாரியும் நீயே
அன்புடன் வருவாய் அம்மா!
காரியம் நடத்திடும் காளியும் நீயே
இன்பம் தருவாய் அம்மா!
நாளும் கோளும் ஏது–சிவ
நாயகி துணைவரும் போது
(அருள் மிகும்)

அருள்நவ ராத்திரி ஒளிவிளக்கேற்றி
சரண் அடைந்தோமே தேவி
வரம்தர நீயே இருகரம் நீட்டி
வருவாய் அம்மா தேவி
சாமுண்டீஸ்வரி தேவி — ஸ்ரீ
அகிலாண்டேஸ்வரி தேவி
(அருள் மிகும்)

## ஊமைக்கு வாழ்வளித்த உத்தமி !

அருள்மிகும் நெமிலியிலே ஆற்றங்கரையில் கோயில்கொண்டு இருள்தனைத் தடுக்கின்ற அன்னை பாலாதிரிபுர சுந்தரியின் அன்புப் பிள்ளைகளிலே கலைமாமணி பாடகர் அமரர் கே. வீரமணியும் ஒருவர்.

அன்னை பாலாவின் "மஹாசண்டிஹோமம்" நிறைவுற்று, விஜயதசமி நிகழும்போது ஒவ்வொரு ஆண்டும் திருமதி ராதாவுடன் வந்து தமது இன்னிசைக்குழு புடைசூழ அன்னைக்கு "இசைச் சேவை" புரிவது அவரது வழக்கம். பல இசை வல்லுநர்கள் பக்க வாத்தியங்களுக்கு மட்டும் சன்மானம் தந்து விடுங்கள். நான் காணிக்கையாக அன்னைக்கு பாடி விடுகிறேன்" என்று கூறுவதுண்டு. ஆனால் பல ஆண்டுகளாக அவரும் திருமதி ராதாவும் அவரது குழுவினரும் ஒரு பைசாகூட வாங்காமல் இசை அர்ப்பணம் செய்தனர் என்பதுடன், அன்னையின் நவராத்திரி வைபவத்திற்கும் காணிக்கை

செலுத்தினர் என்பது எப்படிப்பட்ட மகோன்னதமான விஷயம்! சன்னிதியில் வரும்போதே பனித்த கண்களுடன் "பாலா! பாலா!" என்று கூறுவார்— "அம்மா அம்மா" என்று அரற்றுவார்.

ஒரு தடவை அன்னையின் சன்னிதியில் அவர் வேண்டும்போது, "அம்மா! பன்னிரண்டு மாசங்களை வச்சி சித்திரை முதல் பங்குனி வரையில் வரும் தெய்வீக வைபவங்களைப் பத்தி பன்னிரண்டு பாடல்கள் பாடணும்னு எனக்கு ஆசை! அந்தப் பாட்டுக்களை கவிஞர் நெமிலி எழில் மணிதான் எழுதணும்! என்னோட ஆசையை நிறைவேத்தம்மா!" என்று கூறிவிட்டு என்னையும் பாடல்கள் எழுதச் சொல்லி அன்புக் கட்டளையிட்டார்.

நான் இசைமணி டாக்டர் சீர்காழி எஸ். கோவிந்தராஜன் அவர்கள், டி.எம். சௌந்தரராஜன் அவர்கள், திருமதி வாணி ஜெயராம், திருமதி பி. சுசீலா, திரு. ஜெயசந்திரன், திரு. சீர்காழி சிவ சிதம்பரம் ஆகிய பலருக்குப் பாடல்கள் எழுதித் தந்துள்ளேன். ஆனால் திரு. வீரமணி அவர்கட்கு எழுதுவது இதுதான் முதல் தடவை. எனக்கும் தோன்ற வில்லை, அவரும் கேட்டதில்லை. அது மட்டுமின்றி ஒரு கேசட் முழுமையாக நான் பாடல்கள் எழுத நேர்ந்ததும் அதுதான் முதல்முறை! எனவே அம்பாளைத் தியானம் செய்துவிட்டு கீழ்க்கண்ட பல்லவிகளிலே பன்னிரண்டு பாடல்களை அமைத்தேன். நானா அமைத்தேன்! அந்த அன்னை அல்லவா அமைத்தாள்!

சித்திரை மாதத்திலே—மதுரை
சிங்காரம் பூத்ததடி—எங்கள்
பத்தரை மாற்றுத் தங்கம்—மீனாட்சியின்
பாதத்தை வேண்டுதடி!

வைகாசித் திங்களிலே
காஞ்சிநகர் வந்தேன்
வள்ளல் எங்கள் வரதன்
திருமணக் கோலம் கண்டேன்!

ஆனித் திரு மஞ்சனம்—திரு
அல்லிக்கேணி செல்லணும்—அவன்
மேனி எழில் பூரணம்—அவன்
மேன்மை தன்னை பாடணும்!

ஆடி வெள்ளிக்கிழமை—அருள்
கோடி அம்மன் மகிமை
பாடிப் பதமலர் சூடு—நீ
நாடிடு திருவேற் காடு!

ஆவணி சதுர்த்தியில்
ஆனைமுகன் பிறப்பு
அஞ்சுவதேன் நெஞ்சே
அடைக்கலம் அவன் பொறுப்பு.

புரட்டாசி மாதத்திலே
புகழ் நவ ராத்திரியில்
திரிபுர சுந்தரி
கொலுவிருப்பாளே!

ஐப்பசித் திங்களிலே—குகன்
அருட்பசி தந்தானே
கையினில் வேலெடுத்து—கந்தன்
சஷ்டியில் வந்தானே!

கார்த்திகை தீபம் தெரிகின்றது—வந்த
காரிருள் யாவும் மறைகின்றது
பார்த்ததும் பாபம் கரைகின்றது—சிவன்
பாதத்தின் அருமை புரிகின்றது

மார்கழி மாதம் சீர் நிறைந்து வந்தது
மன்னவனாம் மாயவனின் பேரருளைத் தந்தது
கார்வண்ணக் கண்ணனின் காலடியை வளங்குவது
கோதை எங்கள் ஆண்டாளின் திருப்பாவை ஒலிக்குது!

தைமாதம் வந்தது கால்கள் சபரி சென்றது
கண்கள் ஜோதி கண்டது; கைகள் கூப்பிக் கொண்டது!

மாசிமகம் தன்னில் ஈசன்முகம் பாரு
மகிழ்ச்சியினை நமக்கு அளித்திடும் திருநீறு
வாசி திருவாசகம் வரம்தரும் தேவாரம்
வேதனைகள் தீரும் வேண்டுதல் நிறைவேறும்.

பங்குனிக்குச் சென்றிடுவோம் பழனிமலை—அந்த
பழனியப்பன் தந்திடுவான் இன்பநிலை!
தங்கரதம் கண்டவர்க்கு ஏதுதொல்லை—அந்த
தண்டபாணி மனசு வச்சா என்ன இல்லை?ஷ

அடுத்த வெள்ளிக்கிழமையன்று காலையிலே அன்னை பாலாவின் பாதங்களிலே இந்தப் "பன்னிரண்டு மாத தெய்வீகத் திருவிழாப் பாடல்களை" ஒரு கவரில் போட்டு வைத்து விட்டேன். இரவு அபிஷேகம் முடிந்த வுடன் திரும்பவும் எடுத்துக் கொள்ள நினைத்தேன்.

அன்று இரவு அபிஷேகத்தில் எதிர்பாராத விதமாக ஆதம்பாக்கம் மாாரிதாச ஸ்வாமிகள் வந்து விட்டார். மிகவும் மகிழ்ச்சியோடு அவரைப் பூஜையில் அமர வைத்தோம். தீபாராதனை முடிந்ததும் திடீரென்று அன்னை அவர்மீது ஆவாஹனம் ஆனாள். அமுத மழையாக — அவர் அருள் வாக்கு பொழிய ஆரம்பித்தார்.

நினைத்ததையெல்லாம் கூறி வந்தவர்க்கு நிம்மதியை வழங்கினார். எனக்கு ஒரு சபலம். "நாம் எழுதி அம்பாளின் பாதத்தில் வைத்துள்ள 'பன்னிரு மாதப் பாடல்' கவரினை அவரிடம் தந்து ஆசிபெற்றால் என்ன?'' என்று நினைத்தேன். அதேபோல் அந்தக் கவரை எடுத்து அவர் கரங்களில் தந்து ஆசிவேண்டி நின்றேன்.

பாலாவின் வடிவாக — பனி போன்ற குளிர் மொழியாக அருள்வாக்கு வழங்கும் ஸ்ரீமாரிதாசர் அந்த உறையைத் தொட்டவுடன் உரைத்த அருள் வாக்கு எனது இரத்தத்தையே உறைய வைத்தது.

ஆம். அவர் கூறியது இதுதான்.

"ஏண்டா! பன்னிரண்டு மாசப் பாட்டு தானேடா! காலையிலேயே தான் என் பாதத்துலே வச்சியே! அப்பவே நான் எல்லாப்பாட்டும்

படிச்சுட்டேண்டா! இதை வீரமணிதான் பாடறான்! இதை சங்கீதா கேஸட் கம்பெனி காரங்கதான் எடுக்கப் போறா! ஓஹோ! என்னோட சன்னிதியிலேதான் ரிலீஸ் பண்றியா! ஜமாய்! விழாபேஷா நடக்கிறது."

எனக்கு ஏற்பட்டது அதிர்ச்சியா! ஆனந்தமா? கண்கள் நீரைச் சொரிந்தன. மூடிய கவரில் உள்ள பாடல்களை அப்படியே கூறிய அந்த நெமிலி பாலாவின் மஹாசக்திக்கு முன்னாலே நாமெல்லாம் எம்மாத்திரம்? எனக்கு இருப்பே கொள்ளவில்லை; மறுநாள் அவசரம் அவசரமாக வீரமணி அவர்களின் இல்லத்திற்குச் சென்றேன். விஷயத்தைக் கேள்விப் பட்டவுடன் வெலவெலத்துப் போய்விட்டார். "அம்மா! அம்மா! என்னோட வேண்டுகோளை உடனேயே நிறைவேத்திட்டியே" என்று கூறியவாறு சங்கிதா கேஸட் கம்பெனிக்கு ஃபோன் செய்தார். அவர்களும் எந்தவிதத் தடங்கலும் கூறாமல் "ஓகே! இதைக் கேஸட்டாக வெளியிட நாங்கள் தயார்" என்றார்களே பார்க்கலாம். அவ்வளவுதான்! மின்னல் வேகத்தில் காரியங்கள் நடைபெற்றன. கலைமாமணி கே. வீரமணி—சோமு இசையமைக்க, கே. வீரமணி—ராதா—வித்யா பாட அருள்மிகும் தேவி அன்னை பாலாவின் சன்னிதியில் "பன்னிருமாத தெய்வீகத் திருவிழாப் பாடல்கள் கேஸட் வெளியிடப் பட்டது.

"எழில்மணி! அம்பாளின் கருணை என்னை மெய்மறக்கச் செய்து விட்டது. நானும் எனது மகள், மகன் குடும்பத்துடன் அன்னையின் சன்னிதிக்கு

வரவேண்டும்" என்று கூறி அப்படியே 17.4.87 அன்று குடும்ப சமேதராக வந்தார். அன்னையின் சன்னிதியில் அவர் பாடும்போது அவரது மகளையும் பாடச் சொல்லுமாறு அவரைக் கேட்டுக் கொண்டோம்! அவ்வளவுதான். அவர் கதறக் கதற அழ ஆரம்பித்து விட்டார். எங்களுக்கு ஒன்றுமே புரியவில்லை! தவறாக ஏதும் கேட்டு விட்டோமோ எனத் துடித்து விட்டோம்.

அவர் தன்னைச் சற்றுச் சாந்தப்படுத்திக் கொண்டு "பாடுவதா? என் பொண்ணு பாடுவதா! அவளாலே பேசக்கூட முடியாதே! ஊமையாச்சே அவள்'' என்று கூறவும் சன்னிதியில் இருந்த அனைவரும் கண்கலங்க ஆரம்பித்து விட்டனர்.

உள்ளம் உருக உருகப் பாடும் வீரமணியின் பெண் ஊமையா? எங்களால் அதை ஜீரணம் செய்ய முடியவில்லையே! வீரமணி தொடர்ந்து பேச ஆரம்பித்தார். ''இவளை இன்னிக்கு அம்பாள் கையிலேயே ஒப்படைச்சுட்டேன். இவளுக்கு கல்யாணம் பண்ணி வைக்க வேண்டியது இவ பொறுப்பு. இந்த ஊமைக் குழந்தையை கண் கலங்காம வச்சிக் காப்பாத்தறவனை அம்மாதான் தரணும்" என்று பிரார்த்தனை செய்தார். ''அவளுக்கும் திருமணம் நடக்குமா? என என் மனதிலே ஓர் அதைரியம்!" என்னதான் வசதியாகவும், அழகாகவும் இருந்தாலும் ஊமைப்பெண்ணுக்குத் திருமணம் நடக்குமா? இவர் என்ன அம்பாளையே சோதனை செய்கிறாரே" என்ற லேசான அச்சம் வேறு! நான் குழம்பிப் போனேன்.

ஆனால் அன்னை பாலா அந்த அதைரியத்தையும் அச்சத்தையும் தூள் தூளாக்கி விட்டாள். ஆம்! சரியாக ஆறே மாதத்தில் மிக அழகான மாப்பிள்ளையை அமைத்து — மயிலை கற்பகாம்பாள் கல்யாண மண்டபத்தில் "ஜாம் ஜாமெ"ன்று கல்யாணத்தை நடத்தி விட்டாள். வீரமணி அவர்கள் நெகிழ்ந்து போனார். அது மட்டுமா! பாலாவே அவருக்குப் பேத்தியாகவும் வந்து அவரை தாத்தாவாகவும் ஆக்கி விட்டாள்.

பாலாவே! ஊமைப் பெண்ணுக்கும் வாழ்வளித்த உத்தமியே! உன்னை எண்ணுவதும் தொழுவதும் யாம் பெற்ற பேறல்லவா!

## பாடலில் மயங்கும் பாலா!

வேண்டுவோர்க்கு வேண்டியதை அள்ளி அள்ளித்தரும் அன்னை பாலாவுக்கு இசையென்றால் இன்பம்! பாடலென்றால் பாசம்! ராகங்களிலே ஒரு மோகம்! தாளங்களிலே ஒரு தாபம்! விழிநீர் பெருக அவளைப் பாடி விட்டால் வேதனை விலகும். வளங்கள் பெருகும்.

சென்னை எச்.எம்.வி. நிறுவனத்தில் மேனேஜராகப் பணியாற்றிய அன்பு நண்பர் திரு. மங்கபதி அவர்கள் கீழ்க்கண்டவாறு எனக்கு ஓர் அன்புக் கட்டளையிட்டார்.

"எழில்மணி சார்! இப்போ சந்திரபோஸ் என்கிற இளைய மியூஸிக் டைரெக்டர் நம்ப கம்பெனியிலே ஒரு காஸெட்டுக்கு இசையமைக்கப் போகிறார். அவசியம் நீங்கள் நெமிலி பாலாவைப் பத்தின ஒரு பாடலைத் தர வேண்டும்."

எனக்கு இருப்பே கொள்ளவில்லை. பாலாவைப் பற்றிப் பாடுவதும், அவளைப் பற்றி பாட்டெழுதுவதும் பரமானந்தமல்லவா! ‘அதுவும் யாரோ சந்திரபோஸ் என்கிற இளம் மியூஸிக் டைரெக்டர் இசையமைக்கப் போகிறாராமே’ என்று உள்ளத்திலே ஒரே சந்தோஷம்!

அன்னை கண் திறந்தாள்! கீழ்க்கண்ட பாடல் பிறந்தது!

*திரிபுர சுந்தரி நீ*
*எம்மை ஆதரி பாலா*
*கரியமேனி வண்ணன் தங்கை*
*காலமெல்லாம் காக்கும் மங்கை*

*(திரிபுர)*

*ஹோம குண்டம் ஒளியை வீசும்*
*வீசி மணக்கும் நெய்யின் வாசம்*
*க்ஷேமம் பெருகும் சுற்றி வணங்க*
*தீமை விலகும் நன்மை விளங்க*

*(திரிபுர)*

*மந்திர புஷ்பம் உனக்கு உஷ்டம்*
*ஓது வோர்க்கு ஏது கஷ்டம்*
*சஹஸ்ர நாமம் சாந்தி அளிக்கும்*
*ருத்ரம் சமகம் கேட்டு களிக்கும்*

*(திரிபுர)*

*சாம்பல் என்றும் அருள் மணக்கும்*
*சக்தியே உந்தன் சக்தி இருக்கும்*

*பாம்பை அணிந்த பரமனின் தேவி*
*பாதம் தொழுதால் பாபம் பறக்கும்*
*(திரிபுர)*

திரு. சந்திரபோஸ் அவர்கள் பாடலைக் கண்டு பரவசம் அடைந்தார். வனிதா என்கிற பின்னணிப் பாடகியைப் பாடவைத்தார். பாடல் இசையுடன் கூடி பாலாவின் சன்னிதியிலே ஒலித்தது.

அன்னை பாலாவின் சன்னிதியிலே அந்த இளம் இசையமைப்பாளருக்குப் பாராட்டு மடல் வழங்க அவரை அழைத்தோம். அவரும் மிகுந்த மன மகிழ்ச்சியுடன் வந்தார். வளர்ந்து வரும் இசையமைப் பாளரானதால் அவருக்குத் தொல்லை தரக் கூடாதென்று வாகன வசதி செய்து கொடுத்தோம். முதலில் மறுத்தவர் பின்பு ஏற்றுக் கொண்டார். 5.10.86 அன்று நவராத்திரி நாளின் போது அன்னை பாலாவின் சன்னிதியிலே அவருக்கு "இன்னிசை இளவல்" என்ற பட்டம் அளித்துப் பாராட்டினோம். வெளியே போடப்பட்டிருந்த மேடையிலே அவரை அழைத்து வந்தோம். நெமிலி மக்கள் ஆயிரக் கணக்கிலே கூடி விட்டனர். திரு. சந்திரபோஸ் விழிகளிலே ஆனந்தக் கண்ணீர். நான் பேசும்போது "இந்த இளைய - இனிய இசையமைப்பாளர் - பல படங்களுக்கு இசையமைக்கும் இசை மேதை - இன்று நமது அன்பு அழைப்புக்கு இணங்கி தமக்குப் பல விதமான சினிமா பணிகள் இருப்பினும் அன்னை பாலாவைத் தரிசிக்க வேண்டும் என்ற ஆவலாலும், இசை ரசிகர்களைச் சந்திக்க வேண்டும் என்ற

ஆசையாலும் இங்கே வந்திருக்கிறார். இவர் திரையுலகில் ஒரு பெரிய இசையமைப்பாளர்! அவரது வருகைக்கு மனமார்ந்த நன்றி" எனக் கூறினேன்.

அடுத்து திரு. சந்திரபோஸ் பேசியது என்னை நோக்கி அணுகுண்டை வீசியது போல் இருந்தது. ஆம்! அவர் கூறியது என்ன தெரியுமா?

"நண்பர் எழில்மணி என்னைப் பெரிய இசையமைப்பாளர் என்றும், பல படங்களுக்கு இசையமைக்கும் பணியை விட்டு விட்டு நான் இங்கே வந்ததாகவும் குறிப்பிட்டார். இது அத்தனையும் பொய்! இவர் பயங்கரமாக ரீல் விட்டிருக்கிறார்!" நான் அதிர்ந்து போனேன். படங்கள் இல்லாவிடினும் ஒரு அழகுக்காக நான் கூட்டிச் சொன்னதை இவர் இப்படிப் போட்டு உடைத்து விட்டாரே!

சந்திரபோஸ் தொடர்ந்தார். "அன்பு ரசிகர்களே! கடந்த 45 நாட்களாக எனக்கு எந்தவிதப் பணியுமே இல்லை. காலையில் குளிப்பதற்குக் கூடச் சிரமப்பட்டு, ஏனென்றால் சென்னையில் கடுமையான தண்ணீர் பஞ்சம் — மிகவும் சிரமமான நிலையில் அந்த குளிப்புப்பணியை நிறைவேற்றி விட்டு மயிலை கோல விழியம்மன் கோயிலைச் சுற்றி வந்து கொண்டிருக் கிறேன். என் மேல் உள்ள அன்பால் — ஆசையால் — எழில்மணி இப்படிக் கூறியுள்ளார். ஆனால் அதனை அன்னையின் வாக்காக வேண்டுமானாலும் எண்ணி ஆறுதலடைகிறேன். நெமிலி வாழ் ரசிகப் பெருமக்களே! அன்னையின் கருணையால் நான் முன்னேற வேண்டும் என்று எனக்காகப் பிரார்த்தனை செய்யுங்கள். இசைமேதை — இசைமணி சீர்காழி

கோவிந்தராஜன் போன்ற பல இசைவேந்தர்கள் வந்த இடம் இது. அந்தப் பெரியவர்களின் இசைக்கு முன்னாலே நாங்களெல்லாம் மாணவர்கள்! திரும்பத் திரும்பக் கேட்டுக் கொள்கிறேன். உங்கள் அன்புச் சகோதரனாக என்னை ஏற்று அன்னையிடம் பிரார்த்தனை செய்யுங்கள். நானும் பிரார்த்தனை செய்துள்ளேன்" என்று கூறக் கூற உணர்ச்சி வசப்பட்டு வார்த்தைகள் தடுமாறின. தனது நிலைபற்றிய உண்மையை பட்டவர்த்தனமாகக் கூறிய அந்த வெள்ளை உள்ளம் கொண்ட இன்னிசை இளவல் ரசிகர்கள் முன்னிலையிலே அன்னையைப் பற்றிய பாடல்களை அனுபவித்துப் பாடினார். இரவு பன்னிரண்டு மணி வரையில் அன்னையின் சன்னதியை விட்டு அவர் நகரவே இல்லை.

எங்களுக்கெல்லாம் பெருத்த மகிழ்ச்சி. "அவரது வேண்டுகோளை அன்னை நிறைவேற்ற வேண்டும்" என்று மனப்பூர்வமாக நெமிலி பாலாவை நெஞ்சாரப் பிரார்த்தனை செய்தோம். பிரார்த்தனை பலித்தது.

ஆம்! அந்த அற்புதம் நிகழ்ந்தே விட்டது! சரியாக ஆறு மாதத்துக்கெல்லாம் "சங்கர்—குரு" என்ற படத்திற்காக "காக்கிச்சட்டை போட்ட மச்சான்" என்ற ட்யூனை ஏ.வி.எம். நிறுவனம் ஓ.கே. செய்ய வெண் திரையில் அவரது பெயர் மின்னியது.

அது மட்டுமா! பல படங்கள் மட மடவென்று குவிந்தன.

அன்னை பாலா நினைத்தால் ஆகாததும் உண்டா! இசையமைப்பாளர் சந்திரபோஸ் இதயத்திலே அன்னை பாலா இசையாக வசிக்கிறாள்! அவரை இசைச் சக்கரவர்த்தியாக்கி ரசிக்கிறாள்!

நெஞ்சிலே நன்றியோடு விழிகளில் நீரோடு அவரும் அவரது குடும்பமும் பாலாவின் பெயரைச் சொல்லாத நாளில்லை.

# அன்னையின் அருள்வாக்கு

வடஆற்காடு மாவட்டம், அரக்கோணம் தாலுக்கா மங்கலம் கிராமத்தைச் சேர்ந்த ஸ்ரீ ஜிட்டு வெங்கட்ராமய்யர் ஜோதிடத்திலே விற்பன்னர். ஜாதகத்திலே சூரர்! பொருத்தங்கள் பார்த்துக் கூறி விட்டால் அதற்கு அப்பீலே கிடையாது! நெமிலி ஸ்ரீ பாலா திரிபுர சுந்தரியின் பரம பக்தர்.

அவரிடத்தில் அமரர் சீர்காழி எஸ். கோவிந்தராஜன் அவர்கட்கு அலாதியான பிரேமை. தனது மகள் ஞானவல்லியின் திருமணத்திற்காக ஜாதகப் பொருத்தங்கள் பார்க்க மங்கலம் ஸ்ரீ வெங்கட்ராமய்யரை தனது இல்லத்துக்கு வரவழைத்து அன்புடன் உபசரித்தார். சில ஜாதகங்களைப் பார்க்கச் சொன்னார். அவர் அதில் செல்வன் பிரதாபனின் ஜாதகத்தைத் தேர்ந்தெடுத்தார். சில விளக்கங்கள் கூறி பொருத்தங்கள் மிகவும் சிறப்பாக இருப்பதைத் தெரிவித்தார். சீர்காழி கோவிந்தராஜன் அவர்கட்கு மிகுந்த மகிழ்ச்சி. அப்படியே திருமணத்துக்கும் நாள் பார்க்கச் சொன்னார். திருமண நாள் 20.1.80 என்று குறித்தார். அதாவது டிசம்பர் மாத மத்தியில் 12/79 இல்

ஜாதகம் பார்க்கிறோம். அடுத்த மாதமே 1/80லேயே திருமணம் வைக்க வேண்டும் என்று கூறி விட்டார். அதாவது ஒரு மாத அவகாசமே இருந்தது. எனக்கு தலை சுற்றியது. சத்திரம் பார்க்க வேண்டும், கச்சேரிகள் வைக்க வேண்டும். திருமணப் பத்திரிகை அச்சடித்து அனைவர்க்கும் அனுப்ப வேண்டும். இத்தனை வேலைகளும் ஒரு மாதத்தில் முடியுமா? எனவே சீர்காழி அவர்களும் நானும் அவரிடம் இரண்டு மூன்று மாதங்களுக்குப் பிறகு ஒரு தேதியை வைக்கக் கேட்டுக் கொண்டோம். ஆனால் அவரோ, "இல்லையில்லை! அதே தேதிதான் சரியானது" என்று கூறிவிட்டார். அது மட்டுமா! என்னைப் பார்த்து "ஊருக்குக் கிளம்பலாமா?" என்றும் கூறிவிட்டார். எனக்கு தூக்கிவாரிப் போட்டது.

சீர்காழியார் ஒரு கணம் பதறிப்போய், மறுகணம் "சரிங்க! எப்படியும் அதே தேதியில் முடிச்சுடலாம்'' என்று அவருக்கு தட்சிணை மரியாதை செய்து வழியனுப்பி வைத்தார். எனக்கு மகா எரிச்சல்! "கிராமத்து ஆள் என்பது சரியாகத்தான் இருக்கிறது! ஒரு வி.ஐ.பி. கேட்கிறார்! சற்றுகூட பிடிவிடாமல் அதே தேதிதான் சரி என்கிறாரே! வித்தை இருக்கும் இடத்தில் இப்படி அகம்பாவம் இருக்கும் போலும்'' என மனதுக்குள் பொறுமி விட்டேன். என் வீட்டிலும் எனது மனத்தாங்கலைக் கூறினேன்.

ஆனால் சீர்காழி அவர்களோ எந்தவித பதற்றமும் அடையாமல் அவர் சொன்ன 20.1.1980 தேதிக்கே முயற்சி செய்து சென்னை ஆபட்ஸ்பரியைப் பிடித்து விட்டார்.

அது மட்டுமா, செல்வி டாக்டர் ஞானவல்லி (எம்.பி.பி.எஸ்.)க்கும், செல்வன் டாக்டர் எம். பிரதாபன் (எம்.பி.பி.எஸ்.)க்கும் 20.1.80 அன்று ஜாம் ஜாமென்று திருமணம் நடைபெற்றது. மாப்பிள்ளை அழைப்புக்கு ஏ.கே.சி. நடராஜன் கிளாரினெட்டும், முகூர்த்தத்திற்கு நாமகிரிப்பேட்டை கிருஷ்ணன் நாதஸ்வரமும், வாழ்த்துரை வழங்க திருமுருக கிருபானந்தவாரியார் ஸ்வாமிகளும், வரவேற்பில் கலைமாமணி ஆர். பிச்சுமணி அவர்களின் வீணை இசையைத் தொடர்ந்து "சங்கீத கலாநிதி – இசைப் பேரறிஞர் "டாக்டர். எம்.எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களின் இன்னிசை நிகழ்ச்சியும் என 'தூள்' கிளப்பி விட்டார். சொல்லி வைத்தாற்போல் அத்தனையும் அமைந்து விட்டன.

காலை நிகழ்ச்சிக்கு வந்திருந்த தமிழக முதல்வர் எம்.ஜி.ஆர் அவர்கள் முதலில் சென்று சீர்காழி அவர்களின் தாயாரை வணங்கி விட்டு பிறகு ஆசி வழங்கவந்த காட்சி மனதுக்கு இதமாக அமைந்தது.

மாலை வரவேற்பு நிகழ்ச்சிக்கு டாக்டர் கலைஞர் மு. கருணாநிதி அவர்கள் வந்து சிறப்பு செய்தமை பதமாக இருந்தது. சீர்காழியின் அன்னை தமது பேத்தியின் திருமணத்தை மனம் குளிரக்கண்டு மகிழ்ச்சியில் திளைத்துக் கொண்டிருந்தார்.

என்ன வியப்பு! திருமணம் நிகழ்ந்து நான்கைந்து நாட்களுக்குப் பிறகு சீர்காழியின் தாயார் காலமாகி விட்டார்! அப்போதுதான் ஒரு உண்மையை எனது மாமாவான மங்கலம் வெங்கட்ராமய்யர் கூறினார்.

“டேய்! அன்னிக்கு என்னமோ நீ அப்படி அலட்டிண்டயே! இப்போ பார்த்தியா! அந்த தேதி தள்ளியிருந்தா சீர்காழியோட அம்மா இந்த கல்யாணத்தைப் பார்த்திருக்க முடியுமோ! பெண்ணோட ஜாதகத்தைப் பார்க்கறச்சே சீர்காழி தன்னோட ஜாதகமும் கொடுத்தாரே! அதைப் பார்க்கும்போதுதான் இவர் ரெண்டு மாசங்களுக் குள்ளே கர்மம் பண்ண வேண்டியதா இருக்கார்னு தெரிஞ்சது! கல்யாணத்துக்கு நாள் பார்க்கறச்சே “நீ ரெண்டு மாசத்துக்குள்ளே கர்மம் பண்ணனும், அதுக்குள்ளே ஒரு தேதியிலே கல்யாணம் பண்றது தான் சிலாக்கியம்” அப்படின்னு அசுபமாகப் பேச முடியுமோ? அதனால்தான் விவரத்தை மனசுக்குள்ளே வெச்சுண்டு வெளியே வேற தேதி வாண்டாம்னு சொன்னேன். உங்கிட்டே சொல்றதுக்குக் கூட பயம்! அன்னிக்கே உன் அக்காகிட்டே சொல்லிட்டேன்! நீ வேணும்னா கேட்டுப்பாரு. எந்த விக்கினமும் இல்லாம கல்யாணம் நன்னா நடக்கணும்னு நான் மடியிலே நெருப்பைக் கட்டிண்டிருந்தது எனக்குத்தானே தெரியும்” என்றார்!

நான் பதறிவிட்டேன். அவரிடம் மனப்பூர்வ மாக மன்னிப்பு கேட்டுக் கொண்டேன். விஷயமறிந்த சீர்காழி அவர்கள் ஆடிப்போய் விட்டார்! தன்னோட பேத்தி கல்யாணம் சீக்கிரம் நடத்த வேண்டும் என்று பல ஆண்டுகளாக ஆவலுடன் தவமே இருந்த அவரது தாயார் மட்டும் இந்தத் திருமணத்தைப் பார்க்க முடியாமற் போயிருந்தால் ... ஓ! ... அது எத்தனை பேரிழப்பு! தமது மனமார்ந்த நன்றியினைத்

தெரிவித்துக் கொண்டார். தொடர்ந்து அவரையே தமது வீட்டிற்கு அழைத்து வந்து தமது மகன் சீர்காழி சிவசிதம்பரத்துக்கும் ஜாதகப் பொருத்தம் பார்க்கச் சொல்லி, அதன்படி 17.8.84 அன்று மதுரை காலேஜ் ஹவுஸ் வி.கே.கே. குரூப் அதிபர் திரு. வி.கே. கல்யாண சுந்தரம் அவர்களின் குமாரத்தி செல்வி சாந்தி மீனாட்சிக்கும், செல்வன் டாக்டர். சீர்காழி. ஜி. சிவசிதம்பரம் எம்.பி.பி.எஸ்.க்கும் திருமணம் சிறப்பாக நடந்தேறியது.

இப்படிச் சிறப்பாகப் பேர் வாங்கிய வைதிக வேந்தர் மங்கலம் ஜெ. வெங்கட்ராமய்யர் அவர்களைப் பற்றி ஒருநாள் நெமிலி ஸ்ரீ பாலாவின் பீடத்திலே அருள்வாக்கு வழங்கும் ஸ்ரீ திருப்பக்குழி துரைசாமி ஸ்வாமிகள் மூலமாக பாலா பேசினாள்!

"நாளைக்கு அவன் என்னோட சேரப் போறான்! நாளைக்கு வரைக்கும் தான் அவனுக்கு இந்த உலக பந்தம். எல்லாரும் போய் அவனைப் பார்த்துடுங்கோ"

எங்களுக்குத் தூக்கி வாரிப்போட்டது. மறுநாள் காலை எல்லா உறவினர்களும் சேர்ந்து அவர் வீட்டுக்குச் சென்றோம்.

என்ன ஆச்சரியம். நல்ல திடகாத்திரத்துடன் அங்கு வந்திருந்த அன்பர்கட்கு ஜாதகப் பொருத்தம் பார்த்துக் கொண்டிருந்தார் அந்த ஜாதக மேதை.

"எங்கடா எல்லாருமா வந்திருக்கீங்க! என்ன விசேஷம்?" என்று அவர் கேட்கவும் திருட்டு முழி

முழித்தோம். "நேற்று பாலா திரிபுர சுந்தரி அருள் வாக்கிலே நீங்க இன்னைக்கு போயிடுவேள்னு சொன்னா! அதான் பார்க்கறதுக்கு வந்திருக்கோம்" என்றா சொல்வது? அவரது பொலிவையும், தெளிவையும் பார்க்கும்போது அப்படி சொல்லக் கூடத் தோன்றுமா? அசட்டுத்தனமாக விழித்து விட்டு பக்கத்தில் உள்ள கோயிலைப் பார்க்க வந்ததாகக் கூறிவிட்டு நெமிலிக்கு வந்து விட்டோம்!

அம்பாளின் சன்னிதியிலே ஒரே தர்க்கம். "அம்பாள் அவரைச் சொல்லல்லே! நீங்கதான் தப்பர்த்தம் பண்ணிண்டேள்" இது ஒருவர்.

"இல்லையே! நன்னா அவர் பேரையே சொன்னாளே! வெங்கட்ராமன்னு வேற யாராவது இருப்பாளோ?" இது ஒருத்தர்! வந்த விருந்தினர் ஒருவர் கூறினார்.

"நீங்க ஒண்ணு! அருள் வாக்காவது ஒண்ணாவது! அப்படித்தான் பக்தி மேலீட்டிலே ஏதாவது சொல்லுவா! அப்படியே நடந்துடுமா? வேற வேலையைப் பாருங்க!"

அவர் சொல்லி வாய் மூடவில்லை. மங்கலத்திலிருந்து மிகுந்த பதற்றத்துடன் வந்த ஒருவர் "உடனே கிளம்புங்க! மங்கலம் வெங்கட்ராமய்யர் போயிட்டார்! உடனே கிளம்புங்க!"

எங்களையெல்லாம் சாட்டையால் 'பளீ' ரென்று யாரோ அடிப்பது போலிருந்தது.

"உங்களையெல்லாம் நெமிலிக்கு பஸ் ஏத்திட்டு வீட்டுக்கு வந்தார். மாரை வலிக்கறதுன்னார். ஜலம் சாப்பிடறதுக்குள்ளே போயிட்டார். ஹார்ட் அட்டாக்காம்."

தொடர்ந்து வந்தவர் விவரம் கூறக்கூற சின்னஞ்சிறு குழந்தையான நெமிலி பாலா திரிபுர சுந்தரி விஸ்வரூபம் எடுத்து காளி போல சிரிப்பதாகத் தான் தோன்றியது.

"அபசாரம்! அபசாரம்! உன்னோட அருள் வாக்கை கிண்டல் செய்ய எப்படித்தான் எங்களுக்கு மனசு வந்தது!

எங்களை மன்னிச்சுடு! எங்களை மன்னிச் சுடு" என்று கதற வேண்டும் போலிருந்தது.

"அகிலத்தைப் படைத்தவள் அவள்! அவளது அருள்வாக்கை விமர்சனம் செய்து இப்படி ஆனதே! தேவி! எத்தனையோ பேருக்குத் திருமணம் முடித்ததை அறிவோம். எத்தனையோ பேருக்கு குழந்தை பாக்கியத்தை அருளியதை அறிவோம்!

கண்பார்வையற்ற பெரம்பூர் ராமமூர்த்திக்கு கல்யாணம் செய்து வைத்து கருணை மழை பொழிந்தவள் நீ.

பாடகர் கே. வீரமணியின் பேச முடியாத குமாரத்திக்கு சிறப்பாக மணம் முடித்து சிரிக்க வைத்தவள் நீ!

திருநூலுக்கரசர் — இறைபணிச் செம்மல் — புத்தக வித்தகர் திரு. திருநாவுக்கரசு அவர்கள் மீது

அருட்பார்வை வீசி, வானதி பதிப்பகத்தை பிரம் மாண்டமான மாட மாளிகையாக்கி மகிழ்ச்சி தரச் செய்தவள் நீ!

இன்று மங்கலம் வெட்கட்ராமய்யர் மறைவு பற்றிய செய்தி தந்து எங்களையெல்லாம் பிரமிப்பில் ஆழ்த்தி விட்டாயே!

நீ சுற்றுகின்ற வரை சுற்றிக் கொண்டிருக்கும் பம்பரங்கள் அல்லவோ நாங்கள்!

"அன்னை பாலாவே! உன் அருள்வாக்கே திருவாக்கு! அதுவே வேதவாக்கு" என்று குமுற வேண்டும் போலிருந்தது!

ஆம்! அவள் தரும் அருள்வாக்கு மாறாதது! மறையாதது! நிலையானது!!!

# வாரியார் ஸ்வாமிகளை வரவழைத்த பாலா

அன்னை பாலா திரிபுரசுந்தரி ஆட்சி புரியும் நெமிலியிலே திருமுருக கிருபானந்த வாரியார் ஸ்வாமிகட்கு வரவேற்பு அளிக்க நினைத்தோம். எங்கள் ஊருக்குப் பக்கத்து ஊரான அசநெல்லிக் குப்பம் கிராமத்தில் 30.8.79 அன்று மாலை பிரசங்கம் செய்கிறார் என்பதனால் அன்று காலை எங்கள் ஊரான நெமிலியில், நெமிலி இறைபணி மன்றம் சார்பாக பிரம்மாண்டமான வரவேற்பும் பாராட்டு விழாவும் நடத்த முடிவு செய்தோம். வாரியார் ஸ்வாமிகளுக்கு கடிதம் எழுதிவிட்டோம். பதிலுக்குக் கூடக் காத்திருக்காமல் போஸ்டர், நோட்டீஸ் என்று அமர்க்களப்படுத்தி விட்டோம். இன்னும் இரண்டு நாட்கள் இருக்கும்போது மின்னல் என்ற ஊரிலிருந்து வந்த ஓர் அன்பர் சொன்ன தகவல் என்னைத் தூக்கி வாரிப் போட்டது.

“மின்னலில் 30.8.79 அன்று காலை 10 மணிக்கு கும்பாபிஷேகம். அங்கு 12 மணிவரை பிரசங்கம்

செய்கிறார். உணவருந்திவிட்டு 1 மணிக்கு கிளம்பு கிறார். 2 மணிக்கு அசநெல்லிக்குப்பம் வருகிறார். அங்கு 2 முதல் 5 வரை பிரசங்கம் செய்கிறார். அதன்பின்பு கிளம்பி இரவு 7 மணிக்கு செய்யார் என்ற ஊரில் பிரசங்கம் செய்கிறார். 30.8.79 காலை மின்னலில்தானே அவரது நிகழ்ச்சி! இப்படியிருக்கும் போது "30.8.79 காலை 10 மணிக்கு நெமிலியில் பாராட்டு விழா" என்று ஊரெல்லாம் கூறி, போஸ்டர், நோட்டீஸ் என்று பிரமாதப்படுத்தி விட்டீர்களே! வாரியார் ஸ்வாமிகளிடமிருந்து உங்களுக்கு ஏதும் தகவல் வந்ததா? வருகிறேன் என்று ஒப்புக் கொண்டாரா? எப்படி அவரால் முடியும்?" என்று வினவினார்.

"நான் என்ன பதில் சொல்வது? காலையில் பக்கத்து ஊருக்கு வருகிறாரே! மாலையில் தானே அவருக்கு பிரசங்கம்! காலை நேரத்தை நாம் பயன்படுத்திக் கொள்ளலாமே" என்ற அசட்டுத் துணிச்சலில் இப்படி விளம்பரம் செய்து விட்டதையும், வாரியார் ஸ்வாமிகளிடமிருந்து ஏதும் ஒப்புதல் — தகவல் வரவில்லை என்பதையும் அவரிடம் எப்படி நான் கூறுவேன்.

எனக்கு அழுகையே வந்துவிட்டது. பாலாவின் சன்னதியில் மனமுருகி நின்றேன்! "அம்மா! நான் இப்படி இக்கட்டில் மாட்டிக் கொண்டேனே! நான் என்ன செய்வது! அவர் வரவில்லையென்றால் எனக்கு மிகவும் அவமான மல்லவா! ஊர் முழுதும் அவர் வரப்போகிறார் என்று ஆவலுடன் இருக்கின்றார்களே! எல்லா கோவில்

களிலிருந்தும், குடை, பஜனை, நாதஸ்வரம் என தயாராக உள்ளார்களே! நான் என்ன செய்வேன்?" என்று கதறினேன்.

"அழுதுவிட்டால் போதும்! பாலாவுக்குப் பொறுக்காது!" என்று என் வீட்டில் பெரியவர்கள் கூறுவார்கள்! அது முற்றிலும் உண்மையாக ஆகிவிட்டது. ஆம்! அடுத்த கணம் அங்கே ஓர் அற்புதம் நடந்தது.

"சார் போஸ்ட்!" என்ற குரல் கேட்டு வெளியே வந்து பார்த்தால் கோவையிலிருந்து 25.8.79 அன்று வாரியார் ஸ்வாமிகள் எழுதிய அஞ்சலட்டை 27.8.79 ஆன இன்றைக்கு என் கரங்களிலே கிடைத்தது.

அஞ்சலட்டையா அது? அற்புத அட்டை யல்லவா அது!

"அன்புடையீர், வணக்கம். நலம். தங்கள் கடிதம் கிடைத்தது. மின்னல் நிகழ்ச்சி நின்று விட்டது. 29.8.79 அன்று மாலையே அசநெல்லிக் குப்பம் வந்து விடுகிறேன்.

அங்கு வந்து என்னைச் சந்திக்கவும். 30.8.79 நிகழ்ச்சியை அமைத்துக் கொள்ளலாம்."

அன்புள்ள
கிருபானந்த வாரி

"பச்சை" மையிலே பாங்குடன் எழுதியிருந்த வாரியார் ஸ்வாமிகளின் அந்த வரிகளிலே பாலா சிரித்தாள்! அன்னையின் சன்னிதியை உற்று நோக்கினேன்!

"போதுமா! சந்தோஷம்தானே" என்று பாலா கேட்பது போலிருந்தது.

தன்னுடைய பிள்ளை ஏங்கக் கூடாதே என்ற காரணத்தினால் நிகழ்ச்சி ஒன்றினை நிறுத்தி வாரியார் ஸ்வாமிகளை அன்னை பாலா வரவழைக்கிறாள் என்றால் இது எத்தனை அற்புதம்! இதுபோல எங்கு நடக்கும்?

"பாலா! பாலா!" என உணர்ச்சிப் பெருக்கினால் கதறினேன்!

துயரத்தின் விளிம்பிலிருந்த என்னை இன்பத்தின் எல்லைக்கு அழைத்து வந்த அந்த பாலா திரிபுரசுந்தரிக்கு என்ன கைம்மாறு செய்வது? "அவளையே அடைக்கலம்" என்று சரணாகதி அடைந்து விட்டால் இப்படித்தான் பிரச்சினைகளைத் தீர்த்து விடுகிறாள்.

இது தேவ ரகசியமா? இல்லை தேவி ரகஸ்யமா? இப்படிக்கூட நடக்குமா? 29.8.79 அன்று மாலை பக்கத்தூரான அசநெல்லிக் குப்பத்துக்கு வள்ளல் வடிவேல் ரெட்டியார் அவர்கள் இல்லத்துக்கு வந்திறங்கிய வாரியார் ஸ்வாமிகளை, வணங்கி நின்றேன்.

"உனக்கு அதிர்ஷ்டமப்பா. நிகழ்ச்சியே தள்ளி வைச்சு என்னை அழைக்க வச்சிருக்கியே!" பேஷ்! என்றாரே பார்க்கலாம்.

"மறுநாள் காலை அசநெல்லி குப்பத்திலிருந்து கார்மூலம் நெமிலிக்கு வந்து, நெமிலியில் நடைபெறும் பாராட்டு விழாவில் கலந்து கொள்வதாகத் தீர்மானம்

ஆயிற்று. மாடியில் வாரியார் ஸ்வாமிகள் ஓய்வு எடுத்துக் கொள்ளச் சென்றதும் வள்ளல் வடிவேல் ரெட்டியாரிடம் வந்து நின்றேன். "என்னங்க காலையிலே நெமிலிக்கு சாமி காரிலே போகலாம்னு சொல்லிட்டார்! நான் காருக்கு எங்கே போறது! உங்க காரை கொடுத்தீங்கன்னா அவரை அழைச்சிகிட்டுப் போய் திரும்பவும் உங்க வீட்டுக்கு அழைச்சிண்டு வந்துடறேன்" என்றேன். அவரும் "ஆஹா! பேஷா எடுத்துக்கிட்டுப் போங்க!" என்று அனுமதி தந்து விட்டார்.

எனக்கு மகாசந்தோஷம். ஏனெனில் நெமிலியில் யாரிடத்திலும் கார் கிடையாது. 16 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ள அரக்கோணத்தில் இருந்து கார் வரவழைப்பதற்கும் சக்தியில்லை. ஒருகணம் குழம்பி விட்ட எனக்கு வள்ளல் வடிவேல் ரெட்டியார் வார்த்தைகள் தெம்பை அளித்தன. நிம்மதியாகத் தூங்கினேன்.

ஆம்! மறுநாள் காலை என்மீது எப்படிப்பட்ட அணுகுண்டு வீசப்படப் போகிறது என்பதை அறியாமல் நிம்மதியாகத் தூங்கினேன்.

மறுநாள் காலை 8 மணியளவிலே பிள்ளையார் கோயிலில் இருந்து பிரம்மாண்ட ஊர்வலம் தொடங்குவதற்கான ஏற்பாடுகள் நடந்தன. ஊர் மக்கள் ஆயிரக்கணக்கில் கூடி விட்டனர். பொன்னியம்மன் கோயில், புன்னாக ஈஸ்வரர் கோயில் போன்ற கோயில் குடைகள் அலங்காரமாக வந்துவிட்டன. பஜனை கோஷ்டி, நாதஸ்வர இசை முழங்க ஆரம்பித்தது. நான் எல்லா ஏற்பாடுகளையும்

கவனித்து விட்டு சைக்கிளில் 2 கி.மீ. தூரம் உள்ள அசநெல்லிகுப்பத்திற்குச் சென்றேன்.

வாரியார் ஸ்வாமிகள் தயார் நிலையில் இருந்தார்கள்! "எழில்மணி! நான் 10 நிமிடத்தில் இறங்கி வருகிறேன். நீங்கள் காரோடு தயாராக இருங்கள்! நெமிலிக்கு 9 முதல் 11 வரை நேரம் தருகிறேன். என்னை 11க்கெல்லாம் இங்கே விட்டுவிட வேண்டும். நான் 12 மணிக்கு சாப்பிட்டுவிட்டு 1 மணி நேர ஓய்வுக்குப்பின் 2 மணிக்கு இங்கே விஸ்வநாதர் கோயிலிலே வள்ளல் வடிவேல் ரெட்டியார் ஏற்பாட்டில் நடைபெறும் பிரசங்கத்தைச் செய்து விட்டு 4 மணிக்கெல்லாம் கிளம்ப வேண்டும்" என்று கூறினார்.

நான் மகிழ்ச்சியுடன் கீழே இறங்கிப் பார்த்தால் அங்கே நின்றிருந்த காரைக் காணோம்! எனக்கு பகீரென்றது! திரு வடிவேல் ரெட்டியார் அவர்களிடம் மிகவும் பதற்றத்துடன் "என்னங்க! காரைக் காணோம்" எனக் கூறவும், "என்னது! எங்கேடா போச்சு கார்?" என அங்கிருந்தவர்களை வினவினார். "மிகவும் அவசரமாக உங்கள் பிள்ளை காஞ்சிபுரம் எடுத்துக்கிட்டுப் போனார். 12 மணிக்கு வந்திடுவார்" என்றார்களே பார்க்கலாம்! வடிவேல் ரெட்டியாருக்கு என்ன செய்வதென்று புரியவில்லை. எனக்கு இதயமே நின்றுவிடும் போலாகி விட்டது. அணுகுண்டு வீசியது போல் ஆகிவிட்டதே! மீண்டும் பாலாவிடம் சரணாகதி!

"நெமிலிக்கு போன் செய்யுங்கள்! ஏதாவது வேறு ஏற்பாடு பண்ண முடியுமா பாருங்கள்!" என்றார்.

நான் உடனே எனது நண்பர் சோமசுந்தரம் அவர்கட்கு போன் செய்தேன். "என்ன சார் விஷயம்?" என்றார்.

விவரத்தைக் கூறி நண்பர் வி.பி. சுந்தரம் என்பவரிடம் 'வேன்' ஒன்று இருப்பதை நினைவு படுத்தி அவரை அவசரமாக உதவச் சொல்லுங்கள்" என்றேன். 'சரி' என்று போனை வைத்தார்.

ஐந்து நிமிடங்களுக்குள் போன் வந்தது. பதற்றத்துடன் "என்ன ஆச்சு" என்றேன். "அந்த வேன் ரிப்பேர் என்று கூறுகிறார்கள்" என்றாரே பார்க்கலாம்.

எனக்கு தலை சுற்றியது.

அம்மா! இது என்ன சோதனை! ஒரு நிகழ்ச்சியையே ரத்து செய்ய வைத்து வாரியார் ஸ்வாமிகளை வரவழைத்தது நீ என்பது உண்மை யானால் ஏதாவது அற்புதம் செய்து என்னைக் காப்பாற்று" என்று கதற வேண்டும் போலிருந்தது.

மறுகணம் போனில் பேசிக் கொண்டிருந்த நண்பர் சோமசுந்தரம் "சார் இப்போதுதான் என் தியேட்டர் எதிரே ஏதோ ஒரு கார் வந்து நிற்கிறது. ஒரு நிமிடம் இருங்கள்! விசாரித்து விட்டு வருகிறேன்" என்றார்.

சற்று நேரத்திற்கெல்லாம் "சார்! காஞ்சிபுரம் தினகரன் சில்க்ஸ் முதலாளி சிங்கார முதலியார் கார் அது. அவரோடயே போன்லே பேசுங்க" என்று கூறினார். "ஹலோ! என்ன விஷயம்?" என்று அவர்

கூற நான் போனிலேயே அழத் துவங்கினேன். சமாளித்தவாறு விவரத்தை அவரிடம் கூறி, "இரண்டு மணி நேரம் காரைத் தந்து உதவ முடியுமா?" எனக் கேட்டேன்.

அவர் சிரித்துக்கொண்டே, "என்ன சார் இது! நான் அவரோட பக்தன் சார். அவரோட பிரசங்கத்தைக் கேட்கறதுக்காகத் தானே வந்திருக் கேன். பேஷா என்னோட காரைப் பயன்படுத்துங்கோ. வாரியார் ஸ்வாமிகளுக்கு உதவாம நான் வேற யாருக்கு உதவப் போறேன்! இது என்னோட பாக்கியம் சார். அஞ்சு நிமிஷத்திலே கார் அங்கே வருது" என்று கூற பிரமித்தேன்.

வாரியார் ஸ்வாமிகளையும் வரவழைத்து, காரையும் வரவழைத்து ... ஓ! பாலாவே! உனக்குத் தான் எத்தனை பெரிய மனசு! காரில் வரும்போது வாரியார் ஸ்வாமிகளிடம் மெல்ல விவரத்தைக் கூறினேன்! அவர் மிக மிக வியப்படைந்து போனார். திட்டம் போட்டபடி மிகப்பிரம்மாண்டமான ஊர்வலம் நடைபெற்றது. மிக அழகாக பாராட்டு விழா நடைபெற்றது. நடமாடும் அறுபத்தி நான்காவது நாயன்மாராக விளங்கும் தனது குழந்தையான வாரியார் ஸ்வாமிகளை வரவழைக்கவும், வாழ்த்து வழங்கவும் அன்னை பாலா இப்படியெல்லாம் அற்புதங்கள் நிகழ்த்தியிருப்பாளோ! மீண்டும் கூறுகிறேன். அடித்துக் கூறுகிறேன். ஆம்! அது தேவ ரகஸ்யம்! இல்லையில்லை. தேவி ரகஸ்யம்!!

அவளது அருள் விளையாட்டுக்கத்தான் எல்லையேது!

அடிப்பதும் அவளே! அணைப்பதும் அவளே! அன்பு செய்வதும் அவளே!

## சீர்காழி – வீரமணி – பாலா

இசைமணி – பத்மஸ்ரீ டாக்டர். சீர்காழி எஸ். கோவிந்தராஜன் நெமிலி ஸ்ரீ பாலா திரிபுர சுந்தரியின் பரம பக்தர். ஒவ்வொரு ஆண்டும் நவராத்திரி முதல் நாளன்று அன்னை பாலாவின் சன்னிதிக்கு வந்து தரிசனம் செய்து இன்னிசையைக் காணிக்கை யாக்குவது பல வருடங்களாகக் கலைமாமணி சீர்காழி கைக்கொண்டிருந்த பழக்கம். ஒவ்வொரு ஆண்டும் அம்பாள் அவருக்கு மிக உன்னதமான பட்டங்களைப் பெற்றுத் தருகிறாள் என்று உருக்கத்துடன் கூறுவார். தமிழக அரசவைக் கலைஞரான அவருக்கு இசைப் பேரறிஞர், பத்மஸ்ரீ, டாக்டர் போன்ற பல பட்டங்கள் அவர் நெமிலிக்கு வந்து அன்னை பாலாவைத் தரிசித்த பின் அடைந்த கௌரவங்களாகும்.

“திரிபுர சுந்தரி தேனிசை” என்ற கேஸட்டில் அம்பாளின் பெருமைகளைக் கொண்டு எழுதி யிருந்தேன். சீர்காழி, திருவான்மியூர், திரிசூலம், திருவதிகை, திருக்கழுக்குன்றம், ஆகிய க்ஷேத்திரங் களில் அருள் கொடுக்கும் திரிபுர சுந்தரி பாடல் களையும், நெமிலியில் கருணை மழை பொழியும்

ஸ்ரீபாலா திரிபுர சுந்தரி கவசத்தையும் கூட்டுப் பாடலையும் கலைமாமணி டி.ஆர். பாப்பா அவர்களைக் கொண்டு சிறப்பாக இசையமைக்கச் செய்து வெண்கலக் குரலில் பாடி "இசையர்ப்பணம்" செய்த இசை மேதை அவர்.

அவரது மகள் செல்வி ஞானவல்லிக்கு மிகவும் சிறப்பாக திருமணம் நடந்து முடிந்ததை பாலாவிடம் மிக நன்றியோடு கூறுவார். தனது மகனான செல்வன் சீர்காழி சிவசிதம்பரத்துக்கு பாலாவின் அருளாலே மிகச் சிறப்பாகத் திருமணம் நடந்ததை மனமுருகக் கூறுவார்.

மகளுக்கு பாலாஜி பிறந்து அவரைத் தாத்தா வாக்கியதையும், மகனுக்கு சந்தோஷ் முருகன் பிறந்து மீண்டும் அவரைத் தாத்தா ஆக்கியதையும் மிகவும் பரவசத்துடன் கூறினார்.

அன்னை பாலாவின் அருளால் தமக்கு நிறைவான வாழ்க்கை அமைந்து வீட்டில் நடக்க வேண்டிய எல்லா சுப நிகழ்ச்சிகளும் சிறப்பாக நடைபெற்றதை நன்றியோடு சொல்லுவார்.

1987-ம் ஆண்டு நவராத்திரி விழாவிற்கு 24.9.87 அன்று வருவதாகக் கூறினார். அதற்கு முந்தின நாள் இரவு காஞ்சி காமாட்சி கோவிலில் ஸ்ரீஜெயேந்திர ஸ்வாமிகள் முன்னிலையில் தமது இசை நிகழ்ச்சி நடைபெறப்போவதைக் கூறினார். என்னையும் அவசியம் வரச் சொன்னார்.

நானும் அன்று நெமிலியினின்று காஞ்சிக்கு சென்றேன்! எப்படி? சைக்கிளில்! ஏனெனில் சாலை மறியல் போராட்டத்தால் நெமிலி — காஞ்சிபுரம் பாதை தடைபட்டிருந்ததால்.

இரவு கச்சேரி முடிந்தவுடன் காலை நெமிலிக்கு வருவதைப் பற்றிப் பேச்சு நடந்தது. சாலை சரியில்லை என்ற விவரம் கூறியதும் அவர் திடுக்கிட்டார். காரோ, பஸ்ஸோ, வேனோ எதுவும் நெமிலிக்கு செல்ல முடியாத நிலை கண்டு என்ன செய்வதென்று தெரியவில்லை! இரவெல்லாம் அவர் சரியாகத் தூங்கவில்லை. மறுநாள் நெமிலிக்கு வர வேண்டியவர் கனத்த இதயத்துடன் குடும்பத்துடன் சென்னை திரும்பினார்.

"பல ஆண்டுகளாக நெமிலிக்கு வரும் என்னை அம்பாள் ஏன் இந்த ஆண்டு வரவழைக்கவில்லை?" என்று குமைந்து போனார். ஆண்டாண்டு நவராத்திரிக்கு வருவது அவருக்கு மிகமிகப் பழக்கமாகி விட்டதானால் அந்த இழப்பை அவரால் தாங்க இயலவில்லை.

அன்னை ஏன் வரவழைக்கவில்லை என்பது ஆறு மாதம் கழித்துத்தான் அனைவர்க்கும் புரிந்தது ஆம்! 24.3.88 அன்று தமிழிசை பாடி, தேவ கானம் பாடி தெய்வங்களை மகிழ்விக்க விண்ணை நோக்கிப் பறந்து விட்டார். இசைமேதை அமரரானார். இசையுலகம் தனது தமிழிசைபாடிய இசைப் பேரறிஞரை இழந்தது.

"பாலாவுக்குத் தெரியும் - தனது பிள்ளை தன்னிடம் வரப்போகிறான் என்று. ஆண்டாண்டு காலம் தொடர்ந்து தன்னைக் காணவரும் இசை மணியை - இசைவேந்தனை - ஏன் திருப்பியனுப்பி னாள்! முக்காலமும் உணர்ந்த அந்த மகேஸ்வரிக்கு பிரியப்போகும் தன் மகனைப் பார்க்க நெஞ்சில் திராணி இல்லாத காரணத்தினால் வரவிடாமல் செய்தாளா! சோகத்தைத் தாங்கிக் கொள்ளும் சக்தி தனக்கே இல்லை என்று அந்த மாலவன் சோதரியே

நினைத்து விட்டாளோ! என்றுதான் அனைவரும் நினைத்தனர்.

இசைமணியின் மறைவை குறிப்பால் உணர்த்திய அந்த பாலா திரிபுர சுந்தரி, மீண்டும் ஒரு தடவை அதே விஷயத்தைச் செய்து விட்டாள்.

ஆம். நவராத்திரியன்று விஜயதசமியின் போது அன்னை பாலாவைப் பற்றிய அற்புதமான பாடல்களைப் பாடி அன்னைக்கு இசைக்காணிக்கை புரிவது கலைமாமணி கே. வீரமணி அவர்களின் பழக்கம்.

1990-ம் ஆண்டு நவராத்திரியில் 29.9.90 அன்று காலை 10 மணிக்கு நடைபெறப் போகும் இசை நிகழ்ச்சிக்கு கலைமாமணி கே. வீரமணி அவர்களை எதிர்பார்த்து நெமிலியிலே அன்னை பாலாவின் சன்னிதியில் ஆயிரக்கணக்கான இசை அன்பர்கள் கூடி விட்டனர். வழிமேல் விழி வைத்து கே. வீரமணி — ராதா — குழுவினரை எதிர்பார்த்துக் கொண்டிருக் கிறோம். காலை 10 மணிக்கு அவர் வரவில்லை. தந்திதான் வந்தது.

Inability Admitted in Devaki

— Veeramani

அவசரம் அவசரமாக சென்னை தேவகி நர்ஸிங் ஹோமிற்கு அம்பாள் பிரசாதங்களுடன் சென்ற என்னை அழுதுகொண்டே வீரமணி வரவேற்றார். நான் அவரை ஆஸ்வாசப் படுத்திவிட்டு "எல்லாம் சரியாயிடும்! கவலைப் படாதீர்கள்" என்றேன். ஆனால் அவர் சொன்னது எனக்குத் தூக்கி வாரிப் போட்டது.

"எழில்மணி! என்னை ஏமாத்தாதீங்க! சீர்காழி அண்ணாவை ஏன் பாலா வரவழைக்க வில்லை அவரோட முடிவு அவருக்குத் தெரிஞ்சு போச்சு! அதான் வரவழைக்கலை.

என்னை ஏன் வரவழைக்கலை? என்னோட முடிவும் அவளுக்குத் தெரிஞ்சு போச்சு! அவ்வளவுதான்!"

குழந்தைபோலக் கதறிக் கதறி அழுதார். எனக்கு என்ன செய்வதென்றே புரியவில்லை. திருமதி ராதா அவர்களோ "எழில்மணி சார்! இப்படித்தான் அவர் புலம்பிண்டே இருக்கார். நானும் சீர்காழி அண்ணா மாதிரி தாண்டி போகப் போறேன்! பாலாவுக்குத் தெரிஞ்சுடுத்து! நான் பொழைக்க மாட்டேன்னு" சொல்லிண்டே இருக்கிறார்! நீங்களே ஆறுதல் சொல்லுங்கோ" என்றார்.

நான் அவருக்கு பிரசாதம் தந்துவிட்டு "நீங்க ஏன் இப்படி அதைரியப் படறேள். ஏதோ ஒரு தடவை அப்படி நடந்ததுன்னா உங்களுக்கும் அப்படி நடக்குமா என்ன? தைரியமா இருங்க!" என்று ஆறுதல் கூறினேன்.

ஆனால் ... அவள் மனதை யார் அறிவார்! கலைமாமணி கே. வீரமணி அமரரானார். அம்பாளைப் பாடிய அந்த அன்பு உருவம் — பாலாவைப் பாடிய அந்தப் பாசம் மிகுந்த ஆத்மா — ஐயப்பனைப் பாடிய அந்த வீரமணி அண்ணா தெய்வங்களைக் காண விரைந்து விட்டார்.

பல் ஆண்டுகளாகப் பாடி தனது இதயத்திலே கொலு வீற்றிருக்கும் அந்த இரட்டையர்களை தனது சன்னிதியிலே படங்களாகப் பார்த்துக் கொண்டிருக் கிறார் பாலா!

ஆம்! அமரர் — பத்மஸ்ரீ — இசைமணி — டாக்டர் — பாலாவின் மூத்தபிள்ளை — சீர்காழி கோவிந்தராஜன் அவர்களுக்கும், அமரர் — கலைமாமணி — பாலாவின் இளையபிள்ளை — கே. வீரமணி அவர்கட்கும் அஞ்சலி நிகழ்ச்சி நடக்க வைத்து அவர்களது படங்களைத் திறந்து வைக்கச் செய்தாள் அந்த பாலா திரிபுரசுந்தரி.

அருள்மிகும் தேவி அன்னை பாலாவின் இன்னிசை மணி மண்டபத்திலே அமரர் சீர்காழியும் அமரர் கே. வீரமணியும் புகைப் படங்களாகப் புன்னகை பூத்துக் கொண்டிருக்கிறார்கள்.

அன்னையின் சன்னதியில் தினந்தோறும் அன்னை பாலாவைப் பற்றி சீர்காழியும் வீரமணியும் பாடிக்கொண்டே இருக்கிறார்கள் - கேஸட் மூலம்.

அன்னை பாலாவின் அன்புப் பிள்ளைகளான அவர்களுக்கு மறைவு ஏது? நெமிலி ஸ்ரீ பாலாபீடம் உள்ளவரை அவர்களது குரல் பாலாவின் முன்னே ஒலித்துக் கொண்டே இருக்கும்!




# மெல்லிசை பாடவைத்த மங்கையர்க்கரசி

அன்னை பாலா திரிபுர சுந்தரியின் நவராத்திரி விழா நெமிலியிலே "நவராத்திரி இன்னிசைத் திருவிழா" ஆக நடக்கும். திருவையாறு தியாகராஜ ஸ்வாமிகளின் ஆராதனை விழாவிலே இசைவாணர்கள் தமது இன்னிசையினை காணிக்கை யாக்குவது வழக்கம். அதே போன்று நெமிலியிலே பாலா திரிபுர சுந்தரி அன்னையின் சன்னிதியிலும் இசைவாணர்கள் தமது இன்னிசையைக் காணிக்கை யாக வழங்கி வருகின்றனர். "தாரினி தெலுசு கொண்டினி திரிபுர சுந்தாரிணி தெலுசு கொண்டினி" என்று திரிபுர சுந்தரிமீது தியாகையர்வாள் செய்த கீர்த்தனையை பலவித்வான்கள் தன் மனம் உருகப் பாடுவார்கள்.

"தாரினி தெலுசு கொண்டினி" என்ற தொடருக்கு வழியைத் தெரிந்து கொண்டேன் என்று பொருளாகும். அதையே நயமாக "திருபுர சுந்தாரிணி தெலுசு கொண்டினி" என்று பாடும் போது நமக்கு வழி

காட்டுபவள் திரிபுர சுந்தரி தான் என்பதை தியாகராஜ ஸ்வாமிகள் கூறியுள்ளாரோ என்று கூடத் தோன்றும். இன்னுமொரு விஷயம். நெமிலி ஸ்ரீ பாலா திரிபுர சுந்தரி பீடத்தை அமைத்து அதனை நடத்திவரும் நெமிலி டி.கே. சுப்ரமண்ய ஐயர் பரம்பரை தெலுங்கு பிராம்மணாள் ஆவார்கள். தியாகையர் குடும்பத்தில் உள்ள பலரோடு உறவு கொண்டவர்கள். எனவே தியாகராஜ ஸ்வாமிகளின் உறவுக்காரர்கள் என்ற முறை வருவதனாலும் இப்படி தியாகப்பிரம்ம ஆராதனை "போன்று நடைபெறுகிறதோ" என்று கூட வியக்கத் தோன்றுகிறது. அங்கே ஆற்றில் இராமபிரான் விக்கிரகம் நீந்தி வந்தது. இங்கே நெமிலி ஆற்றில் பாலாவின் விக்கிரகம் நீந்தி வந்தது.

திருவையாற்றினின்று ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமி களின் உறவினராக திருமதி ஆர். வசந்தா அவர்கள் அன்னையின் ஆராதனை நிகழ்ச்சியைக் கண்டு விழி நீர் பெருக நின்ற காட்சி என் மனக் கண்ணில் இன்னமும் தெரிகிறது.

அன்னையின் சன்னிதியிலே கலைமாமணி ஆர். பிச்சுமணி அண்ணா அவர்கள் ஆண்டுதோறும் நடத்தி வரும் வீணை இசை ஸ்ரீ பாலாவின் காதுகளிலே ஒலித்துக் கொண்டிருக்கிறது என்றால் மிகையாகாது.

இசைப் பேரறிஞர் இசைமணி – பத்மஸ்ரீ டாக்டர். சீர்காழி கோவிந்தராஜன், இளைய இசை மணி டாக்டர் சீர்காழி ஜி. சிவ சிதம்பரம், ஏழிசை ஏந்தல் – கலைமாமணி குன்னக்குடி வைத்தியநாதன் கலைமாமணி – டி.ஆர். பாப்பா அவர்கள், கலை மாமணி கே. வீரமணி – ராதா, இசைத்தென்றல் காஞ்சி மல்லிகார்ஜுனன், பக்தி இசைத் திலகம்

வடபழனி ஸ்ரீனுவாசன், வித்யா, சீர்காழி எதிரொலி மாம்பலம் ஸ்ரீனுவாசன், சாயி அருட் செல்வர் மலேஷியா வாசுதேவன், திரை இசையமைப்பாளர் சந்திரபோஸ், இசையரசி வாணி ஜெயராம், கலைமாமணி டி.எம். சௌந்தரராஜன் மற்றும் பல நூற்றுக்கணக்கான இசைவாணர்கள் கலந்து கொள்ளும் நவராத்திரி விழாவில் கலந்து கொள்ள மெல்லிசை மன்னர் எம்.எஸ். விஸ்வநாதன் அவர்களை அழைத்தோம்.

அம்பாளின் பல பாடல்களை ஒலிப்பதிவு செய்து வரும் எச்.எம்.வி. நிறுவனம் திரு. முத்துக்குமரன் அவர்கள் என்னை அவருக்கு அறிமுகம் செய்து வைத்தார். ஒரு கணம் கண்ணை மூடியவாறு சிந்தனை செய்த திரு. எம்.எஸ். விஸ்வநாதன் அவர்கள் மறுகணம் ''பேஷாக வருகிறேன். அம்பாளைத் தரிசனம் செய்யக் கொடுத்து வச்சிருக்கணும் என்றார். 8.10.89 அன்று நவராத்திரி நாளில் வருவதாகக் கூறிவிட்டார். அதேபோல தவறாமல் வந்து விட்டார்.

அம்பாளின் அபிஷேகத்தின் போது நாங்கள் அனைவரும் அமர்ந்து கொள்வது வழக்கம். ஆனால் எம்.எஸ்.வி. அவர்களோ "பரவாயில்லை நிற்கிறேன். எனக்கு நின்று பழக்கம்தான். எத்தனை ஆர்க்கெஸ்ட்ரா கச்சேரியில் மணிக்கணக்காக நின்றிருப்பேன்! அம்பாளுக்காக நிற்பதில் ஆனந்தம் தானே" என்று கூறி மூன்று மணி நேரம் அப்படியே நின்று கொண்டு அன்னையின் அபிஷேகம், அலங்காரம், அர்ச்சனை ஆராதனை ஆகியவற்றைக் கண்டு களித்தார்.

அன்னையின் சன்னிதியிலே அவருக்கு ஒரு பாராட்டு மடல் வாசித்தளித்தார்கள். நவக்கிரகங்களைப் பற்றியும், விநாயகர் அகவலையும், "ஸ்ரீ கிருஷ்ண கானத்தையும்", கருமாரி பாடல்களையும் மிகச்சிறப்பாக இசையமைத்த அந்த மெல்லிசை மன்னருக்கு "ஸ்ரீ கிருஷ்ண கான மணி" என்ற பட்டம் அளித்து கௌரவித்தார்கள். சன்னதிக்கு வெளியே கட்டுக்கடங்காத கூட்டம். ஆயிரக்கணக்கான பாடல்களுக்கு அற்புதமாக இசையமைத்த அந்த இன்னிசை மேதையைக் காண — அவரது குரலைக் கேட்க கூட்டம் திரண்டு கிடந்தது.

அன்புடனும், மகிழ்ச்சியுடனும் பேச ஆரம்பித்தார் அவர்.

"அந்த காலத்துலே கலைஞர்களை இப்படி ராஜாவோ மந்திரியோ பாராட்டுவாங்க! இப்போ ராஜாவுமில்லே! மந்திரியுமில்லே! இது போன்ற நல்ல உள்ளங்கள் தருகிற பாராட்டுதான் மனசுக்கு நிறைவா இருக்கு.

இந்த அம்பாள் பல அற்புதங்களைச் செய்த தெய்வம். இறைபணி மன்றத் தலைவர் பேசும்போது "அகில உலக இசைச்சக்ரவர்த்தி" என்று பேசினார். நான் பணிவோட இப்போதைக்கு மறுக்கிறேன். ஆனா பாலா நினைச்சா நான் அகில உலக இசைச் சக்கரவர்த்தி ஆகலாம்! எல்லா ரசிகர்களும் பாடச் சொன்னாங்க! நான் வரும்போது கேட்டேன். ஏதாவது ஆர்க்கெஸ்ட்ரா கச்சேரி இருக்கா! ஏன்னா நானும் நடுவிலே புகுந்து ரெண்டு பாட்டு பாடிடலாமேன்னு

தான். ஆனா "அதுமாதிரி எதுவும் இல்லே! பரதநாட்டியக் கச்சேரிதான் சன்னதியிலே நடக்கப் போறதுன்னார் நண்பர். எச்.எம்.வி. முத்துக்குமார். "சரி! நாட்டியக்கச்சேரி நடக்கிறப்போ நம்பளை ஏன் பாடச் சொல்லப் போறாங்கன்னு பாட்டுப் புஸ்தகம் எதுவும் கொண்டு வரல்லே! ஆனா என்னோட ஆர்மோனியப் பெட்டி காரில் இருக்கு. ஏன்னா நான் எங்கே போகறதுன்னாலும் அதைமட்டும் பிரிய மாட்டேன். பிளேன், கப்பல், கார் என்று எதில் போனாலும் என்னோட ஆர்மோனியப் பெட்டி எங்கூடதான் இருக்கணும். அப்படி ஒரு பழக்கம் எனக்கு. கவிஞர் நெமிலி எழில்மணி ஒரு பாட்டு தந்தார்னா உடனே உங்க முன்னாடியே நான் தயாரா இருக்கேன்" என்று கூறினார்.

எனக்கு பரம சந்தோஷமாகி விட்டது. அமரர் டாக்டர் சீர்காழி எஸ். கோவிந்தராஜன் அவர்கள் பாடிய பைரவி ராகத்தில் நான் இயற்றிய "பாலாதிரிபுர சுந்தரி" என்ற பாடல் தயாராக இருந்தது. சட்டென்று அவரிடம் அதைக் கொடுத்து விட்டேன். ஒரு கணம் பாட்டைப் பார்த்தார். அவ்வளவுதான். மறுகணம் ஆர்மோனியம் மேடைக்கு வரவழைக்கப்பட்டது.

அதே பாடலை தமக்கே உரிய மெல்லிசைப் பாணியிலே மேடையிலேயே இசையமைத்து மிக அற்புதமாக அவர் பாடப்பாட திரண்டு வந்திருந்த கூட்டத்திற்கு உற்சாகம் தாங்கவில்லை. தங்களது தொடர்ந்த கரகோஷத்தினால் தங்களது மனப்பூர்வ மான மகிழ்ச்சியைத் தெரிவித்தனர்.

என்ன இது அற்புதம்! கொஞ்சங் கூட ஏற்பாடு செய்யாமல் எக்ஸ்டம்போர் என்று கூறுவார்களே அதுபோல் மின்னல் வெட்டும் நேரத்திலே தனது பாடலை மெல்லிசை மன்னரிடம் தர வைத்து தனது பாடலை மெல்லிசையில் மிக ஆனந்தமாகக் கேட்டுக் கொண்டிருக்கும் அந்த நெமிலி பாலாதிரிபுரசுந்தரியின் . பெருமையை என்ன வென்பேன்!

பல ஆயிரக்கணக்கான ரூபாய்களைப் பெற்றுக் கொண்டு, நேரம் காலம் இவையெல்லாம் பார்த்து, பலருடைய ஒத்துழைப்பைக் கோரி ஒரு பாடலுக்கு இசையமைக்கும் இசைமேதையினை ஒரு சில கணங்களிலே தன்னிடமே வரவழைத்து தனது முன்னாலேயே இசையமைக்க வைத்து இனிமையாகப் பாடவைத்த அந்த இறைவியின் திருவிளையாடல்தான் என்ன!

இதோ அந்தப் பாடல்

*பாலா திரிபுர சுந்தரி*
*எம்மை ஆதரி (பாலா)*

*வேலாயுதனைப் பெற்ற*
*தேவி தயாபரி*
*வேண்டும் அன்பர்கள் மனம்*
*வாழும் கிருபாகரி (பாலா)*

மாயே — பைரவி தாயே
வரம் தர நீயே
இங்கு வருவாயே
சேயாய் உந்தனின் முன்னே
ஓயாமல் இசைத்தேனே
தாயாய் நெமிலியிலே
வாழும் அன்புத்தேனே (பாலா)

எங்கள் மகிழ்ச்சிக்கு எல்லையேது! அன்னை புரிந்த விளையாட்டுக்குக் காரணம் ஒரு மாதம் கழிந்து தான் புரிந்தது!

ஆம்! என்னை வரவழைத்து, மெல்லிசை மன்னர் எம்.எஸ். விஸ்வநாதன் கூறிய ஒரு தகவல் ...! ஓ அதைக் கேட்டு எனது மேனியே சிலிர்த்தது!

"அம்பாள் சன்னிதியிலே" "அகில உலக இசைச்சக்கரவர்த்தி" என்று கூறியபோது நான் மறுத்தேன் அல்லவா! இதோ அம்பாள் அதனை மெய்யாக்கிக் காண்பித்து விட்டாள். மேலை நாடுகளிலே மூன்று மாதம் எனது நிகழ்ச்சி நடைபெறுகிறது, என்ற தகவல் வந்திருக்கு. அகில உலகத்திலும் இசை நிகழ்ச்சி நடத்த அன்னை எனக்கு வாய்ப்பு தந்திருக்கிறாள்! எழில்மணி! இது பெரிய விஷயம்! தாய் அங்கே தத்ரூபமாக இருக்கிறாள். நீங்கள் சீர்காழியை மரியாதைக்காக "டாக்டர்" என்று சன்னிதியில் கூற அவர் அடுத்த ஆண்டு டாக்டர் பட்டத்துடன் நெமிலி வந்தாரல்லவா! என்னையும் அகில உலக இசைச் சக்கரவர்த்தி என்றீர்கள்! ஒரு

அன்புக்காக! ஆனால் அன்னை மெய்யாக்கி விட்டாள். அடடா! நான் பிரமிப்பில் ஆழ்ந்து விட்டேன்" என்றார்.

மெல்லிசை பாடவைத்த அந்த மங்கையர்க் கரசியின் சன்னிதியை விழிகளில் நீர்பெருக நோக்கினேன்! அவளோ குறும்பாகச் சிரித்துக் கொண்டிருக்கிறாள்!

# திருமணம் நடத்தும் திரிபுர சுந்தரி

காளிகாம்பாள் கோயில் சிவாசாரியார் ஸ்ரீ சாம்பமூர்த்தி சிவாசார்யாள் அவர்களுடைய இரண்டு புதல்விகட்கும் அன்னை பாலா திரிபுர சுந்தரி எப்படித் திருமணம் முடித்து அற்புதம் செய்தாள் என்பதனை வானதி பதிப்பகம் வெளியிட்ட "திரிபுர சுந்தரி திருவிளையாடல்'' என்ற நூலில் மூலம் அன்பர்கள் அறிந்திருப்பீர்கள்.

ஆனால் டென்மார்க் நகரிலே உள்ள ஒரு அன்பருக்கு அன்னை எப்படி அற்புதம் புரிந்தாள் என்பதனை இதன்மூலம் அன்பர்கள் அறியலாம்.

2.4.87 அன்று அன்னை பாலா திரிபுர சுந்தரியின் பிரசாதத்தை வேண்டி டென்மார்க்கி லிருந்து கணேச சர்மா என்னும் அன்பர் நெமிலிக்கு கடிதம் எழுதியிருந்தார். முகவரியில் பார்க்கிறேன் அமரரான எனது சித்தப்பாவின் பெயரான டி.கே. சுந்திரராமய்யர் என்று குறிப்பிட்டு வந்திருந்தது.

எனக்கோ பெருவியப்பு! டென்மார்க் எங்கே உள்ளது! நெமிலி எங்கே உள்ளது! அவருடைய

விலாசத்திற்கு கடிதம் எழுதி பிரசாதம் வைத்து கீழ்க்கண்டவாறு விவரங்களைக் கோரியிருந்தேன். அன்புடையீர்,

வணக்கம். இத்துடன் நெமிலி ஸ்ரீ பாலாதிரிபுர சுந்தரி பிரசாதம் அனுப்பியுள்ளேன். தாங்கள் முகவரியில் குறிப்பிட்டிருந்த "டி.கே. சுந்திரராமய்யர் என்பவர் எனது சித்தப்பாதான். கடந்த 40 ஆண்டுகளாக அன்னையின் பூஜைகளைச் சிறப்பாகச் செய்து வந்த அவர் இரண்டாண்டுகளுக்கு முன்பு தான் அமரராகி அன்னையின் திருவடி சேர்ந்தார். தற்போது எனது இளைய மகன் செல்வன் மோகன கிருஷ்ணன் — மறைந்த எனது சித்தப்பாவிடம் உபதேசம் பெற்றவன் - பூஜைகளைச் செய்து வருகிறான். எனது சித்தப்பாவை தங்கட்கு எப்படித் தெரியும்? நீங்கள் அம்பாளைத் தரிசனம் செய்திருக்கிறீர்களா?" என்றெல்லாம் கேட்டிருந்தேன்.

*3.5.87* அன்று எனது கடிதம் கிடைக்கப் பெற்று, அவர் எழுதிய பதில் என்னைத் திகைப்பில் ஆழ்த்தியது.

"அன்புடையீர்,

திரு. டி.கே. சுந்திரராமய்யர் என்பவரைப் பற்றி நான் ஏதும் அறியேன். இதுவரை நான் நெமிலி அன்னையைப் பற்றிக் கேள்விப்பட்டதும் இல்லை. நான் இலங்கையைச் சேர்ந்தவன். படிக்கவும், உத்தியோகம் புரியவும் டென்மார்க் நகருக்கு வந்துள்ளேன். எனக்கு அம்பாள் என்றால் மிகவும் பிரேமை! ஒருநாள் Billund என்ற நகரத்தில் உள்ள நூல் நிலையத்திற்குச் சென்றபோது வானதி பதிப்பகம் வெளியிட்ட கவிஞர் நெமிலி எழில்மணி எழுதிய

“திரிபுர சுந்தரி திருவிளையாடல்” என்ற புத்தகத்தைப் படிக்கும் பாக்கியம் பெற்றேன். அதில் திரு. டி.கே. சுந்திரராமய்யர் பூஜை செய்கிறார் என்ற குறிப்பு இருக்கவும் அவரது முகவரி வைத்து எழுதினேன். புத்தகத்தை எழுதிய எழில்மணியாகிய நீங்களே எனக்கு கடிதம் எழுதியிருப்பது கண்டு மிகவும் மகிழ்ச்சியடைந்தேன். எனக்கு ‘‘திரிபுர சுந்தரி திருவிளைாடல்” புத்தகம் அனுப்பி வையுங்கள். தங்கள் கடிதத்திலே “16.4.87 அன்று தாங்கள் எழுதிய திரிபுரசுந்தரி தேனிசை என்ற பாடல்களை தமிழக அரசவைக் கலைஞர், டாக்டர் பத்ம ஸ்ரீ சீர்காழி எஸ். கோவிந்தராஜன் அவர்கள் கலைமாமணி டி.ஆர். பாப்பா அவர்களின் இசையமைப்பிலே பாடி அது கேஸட்டாக வெளியிடப்படுகிறது என்று கூறியிருந்தீர்கள். அதனையும் அனுப்பி வையுங்கள்” என்று எழுதியிருந்தார்.

என்னே அன்னையின் திருவிளையாடல் வானதியின் “திரிபுர சுந்தரி திருவிளையாடல்” என்ற புத்தகம் டென்மார்க்குக்கும் நெமிலிக்கும் ஓர் ஆன்மீகப் பாலத்தையல்லவா கட்டி வைத்தது. அந்தப் புத்தக வெளியீட்டு நிகழ்ச்சி இன்னும் என் நெஞ்சிலே பசுமையாக உள்ளதே!

1985-ம் ஆண்டு இசைமணி சீர்காழி அண்ணாவிடம் நெமிலியில் உறையும் ஸ்ரீ பாலாவின் திருவிளையாடல்களைக் கூறியதும், அவர் உடனே இறைபணிச் செம்மல் - புத்தக வித்தகர் - திருநாலுக் கரசர் வானதி திருநாவுக்கரசு அவர்களிடம்

அருமையான முன்னுரையுடன் அருள்மிகும் தேவி அன்னை பாலாவின் நவராத்திரி விழாவில் 14.10.85 அன்று வானதி திருநாவுக்கரசு அவர்களே வெளியிட முதற்பிரதியினை இசை மேதை சீர்காழி அவர்கள் பெற்றதும் நிழற்படம் போல எனது நெஞ்சில் வந்தன!

நான் பெருமகிழ்ச்சியுடன் "திரிபுரசுந்தரி திருவிளையாடல்" புத்தகத்தையும், அன்னையின் சன்னிதியிலே, 16.4.87 திரைப்படப் பிரமுகர் டி. ராமானுஜம் அவர்களால் வெளியிடப் பட்ட "திரிபுர சுந்தரி தேனிசை" என்ற கேஸட்டையும் அனுப்பி வைத்தேன்.

அது முதற்கொண்டு அம்பாளின் பல நூல்களையும், கேஸட்டுகளையும் நான் அனுப்ப தொடர்ந்து மாதம் ஒருமுறை டென்மார்க்கிலிருந்து கடிதம் எழுத ஆரம்பித்தார். அன்னை பாலாவின் அழகான சின்னஞ்சிறிய புகைப்படங்கள் தமது நண்பர்களான அமெரிக்கர்களின் கார்களிலே அழகுபவனி வருவதை ஆனந்தத்துடன் எழுதியிருந்தார்.

ஒவ்வொரு வாரமும் அன்னை பாலாவின் பூஜை டென்மார்க்கிலும் நடைபெற்றது. ஒருநாள் திரு. கணேச சர்மா எழுதிய கடிதம் என்னை திகைப்பில் ஆழ்த்தியது.

ஆம்! அவர் தமது ஜாதகத்தை அம்பாள் பீடத்திற்கு அனுப்பி வைத்து அன்னையின் அருளால் தனக்கு திருமணம் நிகழ வேண்டும் என அன்புடன் கடிதம் எழுதியிருந்தார். எனக்கோ வியப்பு ஒரு பக்கம்!

திகைப்பு ஒரு பக்கம்! டென்மார்க் அன்பருக்கு திருமணம் நடத்த நெமிலி அம்பாளுக்கு அப்ளிகேஷன்! எப்படியிருக்கிறது? அவர் இலங்கையிலே பெண் எடுக்க வேண்டும்; அந்தத் திருமணம் சிறப்பாக நடைபெற வேண்டும். இது என்னடா சோதனையாகி விட்டதே என்று நான் பயந்து விட்டேன்.

ஆனால் அவள் நினைத்தால் நடக்காததும் உண்டோ! அகிலாண்ட நாயகி என்பது அன்னை பாலாவுக்கே பொருந்தும்.

ஆம்! கொழும்பிலிருந்து அழகான பெண்ணைத் தேர்ந்தெடுக்க வைத்தாள். சென்னையைச் சேர்ந்த அவருடைய உறவினர் திருமதி கமலாதேவி துணைபுரிய 6.2.91 அன்று டென்மார்க் மாப்பிள்ளைக்கும், கொழும்புப் பெண்ணுக்கும் நமது திருச்சியில் ஜாம்ஜாமென்று திருமணம் நடந்தது. டென்மார்க் அன்பர் திரு கணேச சர்மா அம்பாள் சன்னதிக்கு மணப்பெண்ணை அழைத்துக் கொண்டு நெமிலியில் வந்து நிற்கையில் எங்களுக்கெல்லாம் எப்படி இருக்கும்! எத்தனையோ திருமணங்கள் எப்படியெப்படியோ பிளான் செய்தும் கடைசியில் காலை வாரி விட்டதைக் கண்டிருக்கிறோம்.

நெமிலி ஸ்ரீ பாலாவே சரணமென்று நினைத்து, அவளையே சதா சர்வகாலமும் தியானம் செய்த டென்மார்க் கணேச சர்மா அவர்களின் வாழ்க்கை யிலேதான் எப்படிப்பட்ட அற்புதம். அம்பாளின்

பெரிய திருவுருவப்படத்துடனும் பிரசாதங்களுடனும் டென்மார்க் பயணமானார்.

திருமணம் முடிக்கும் திரிபுர சுந்தரியை கீழ்க்கண்டவாறு பாடிப் பரவுவதே நாம் பெற்ற பேறாகும்.

*ஆற்றங்கரையில் கோயில் கொண்டாள் பாலா*
*திரிபுர சுந்தரி*
*அழகுடன் நெமிலி நகரினில் வந்தாள் பாலா*
*திரிபுர சுந்தரி*
*(ஆற்றங்கரையில்)*

*காற்றும் அவளே நீரும் அவளே*
*காப்பவள் அன்றோ அன்னை*
*போற்றிடில் என்ன தூற்றிடில் என்ன*
*அன்னை அறிவாள் உன்னை*
*அவள் திருவடியே வீடு—நீ*
*அனுதினம் அவள்புகழ் பாடு*
*(ஆற்றங்கரையில்)*

*எண்ணிய யாவும் இனிதாய் முடிய*
*தருவாளே திருத் தீர்த்தம்*
*அங்கும் இங்கும் அலைவது ஏனோ*
*தரிசிப்பாய் மலர்ப் பாதம்*
*பஞ்சாமிர்தமே அளிப்பாள்—நம்*
*பஞ்சம் யாவையும் அழிப்பாள்*
*(ஆற்றங்கரையில்)*

திருமணம் முடிக்கும் திரிபுர சுந்தரி
கொண்டது குழந்தை வடிவம்
திருவருள் தந்து குறைகளைத் தீர்க்கும்
திரிபுர சுந்தரி தெய்வம்
குறைகள் வருவதும் ஏது ?—அந்த
குணவதி நாமம் ஓது

(ஆற்றங்கரையில்)

## இப்படியும் நடக்குமா ?

மதுரை மாவட்டம் கொடுவிலார்பட்டி ஸ்ரீசச்சிதானந்த ஆஸ்ரமம் சார்ந்த தேவி உபாசகர் தவத்திரு பரஞ்சோதி ஸ்வாமிகள் ஆன்மீக உலகிலே அனைவரும் போற்றுகின்ற அன்பு மனம் கொண்ட பெரியவர். அன்னை ஸ்ரீராஜ ராஜேஸ்வரியின் அன்பிலே திளைத்து ஸ்ரீ வித்யாபீடம் கண்டு நாடிவரும் அன்பர்கட்கு நல்லன செய்யும் வல்லவர் அவர். நடத்துகின்ற ஸ்ரீராஜ ராஜேஸ்வரி நவராத்திரி. பூஜைகளும் பௌர்ணமி பூஜைகளும் மிகவும் பிரசித்தம்.

ஒருநாள் காலை மாதாஜி அவர்களுடனும், அன்பர்களுடனும் அன்னை பாலா திரிபுர சுந்தரியைக் காண நெமிலிக்கு விஜயம் செய்தார். ஸ்ரீ பாலாவின் சன்னிதியிலே அன்னையைக் கண்டவர் ஆனந்த மேலீட்டால் அப்படியே அமர்ந்து கண்ணீர் விட ஆரம்பித்தார். சுமார் அரைமணி நேரம் குலுங்கிக் குலுங்கி அழுது அன்னையிடம் தமது கண்ணீரையே காணிக்கையாக்கினார்.

"எழில்மணி! இங்கே அம்பாள் அருள்மழை பொழிகிறாள்! ஓ! அந்த இன்ப அதிர்ச்சியை என்னாலே தாங்க இயலாமல்தான் கண்ணீர் விட ஆரம்பித்தேன்! ஓ! இது பேரின்பம்! எவருக்கும் கிட்டாத பேரானந்தம்! ஆஹா! என்ன தேஜஸ்? என்ன சான்னித்யம்!! இந்த அற்புத அனுபவத்தை என்னால் மறக்கவே இயலாது" என மனம் பூரித்து மடைதிறந்த வெள்ளம்போல அமுத மொழிகளைக் கூறினாள்.

அதன் பின்பு அம்பாளின் அற்புதங்களை நாங்கள் கூறக் கூற அன்புடன் கேட்டுவிட்டு அனைவர்க்கும் ஆசிகள் வழங்கினார். அனைவரும் கொடுவிலார்பட்டி வரவேண்டும் எனவும், அன்னை ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரியின் கருணாகடாட்சம் பெற வேண்டும் எனவும் அன்புக் கட்டளையிட்டுவிட்டு விடை பெற்றார்.

அதன் பின்பு பத்து நாட்கள் கழித்து நெமிலியிலே அன்னையின் சன்னிதியிலே ஓர் அதிசயம் நிகழ்ந்தது.

அன்று சந்திர கிரகணம். மாலை 6¾ மணிக்கு துவங்கி இரவு 9¾-க்கு முடிவடைகிறது. கிரகணத்தின் போது அம்பாளின் சன்னிதியை சாத்திவிட்டு அதன் பின்பு கிரகணம் முடிந்தவுடன் அனைவரும் குளித்து மிகவும் மடியாக ஆசாரத்துடன் அம்பாளுக்கு அபிஷேகம் செய்து தீபாராதனை காட்டுவது வழக்கம்.

அன்று நான் அவசரமாக வேலூர் செல்ல வேண்டியிருந்தமையால் பீடத்தில் உள்ளவர்களிடம் "சரியாக 6½ மணிக்கே நடையைச் சாத்தி விடுங்கள் 6¾-க்கு கிரகணம் ஆரம்பம்! ஜாக்கிரதை" என்று எச்சரித்து விட்டுச் சென்றேன்.

மாலை 2 மணிக்கு வேலூர் சென்றிருந்த, நான் பணியை முடித்துக் கொண்டு இரவு 7½ மணிக்கு நான் நெமிலிக்கு வந்து அம்பாளின் பீடத்திற்கு சென்று பார்த்தபோது அதிர்ச்சியால் உறைந்து விட்டேன். அம்பாளின் சன்னிதி திறந்து கிடக்கிறது. பாலா அழகாக தர்பாரில் ஆட்சி புரிந்து கொண்டிருக்கிறாள். வீட்டிற்குள் சென்று பார்க்கிறேன். அனைவரும் ஏதோ தொலைக்காட்சியின் சுவாரஸ்யமான நிகழ்ச்சியில் மூழ்கிக் கிடந்தார்கள்; நான் சத்தம் போட்டு "இப்படி கிரகணத்தின்போது அம்பாளின் நடையைச் சாத்துவதை மறந்துவிட்டு அப்படியென்ன டி.வி. வேண்டியிருக்கிறது! படித்துப் படித்துச் சொல்லியும் கோட்டைவிட்டு விட்டீர்களே' என்று கூறினேன்.

அப்போதுதான் அனைவரும் தமது தப்பிதத்தை உணர்ந்தனர். "அடடா! அபசாரம் நடந்து விட்டதே! அத்தனை கோயில்களும் மூடிக்கிடக்கும் இந்த சந்திர கிரகண நேரத்தில் நமது நெமிலியில் பாலா திரிபுர சுந்தரி பீடம் மட்டும் இப்படித் திறந்த நிலையில் அமைந்து விட்டதே! கிரகணம் தொடங்கி அரைமணி நேரத்துக்கு மேல் ஆகிவிட்டதே! இனிமேல் கதவுகளைத் தொடுவது கூட அபசாரமல்லவா! என்ன செய்வது?" என்று அனைவரும் துடித்தனர்.

எனக்கு கண்ணீரே வந்துவிட்டது! "இந்த மறதியை ஏனம்மா இவர்களுக்குக் கொடுத்தாய். இந்த சோதனையை ஏன் அளித்தாய்! நாங்கள் செய்துவிட்ட அபசாரத்திற்கு நாங்கள் என்ன செய்வோம்! நீதான் மன்னிக்க வேண்டும்" என்று கதறினேன்.

அப்போதுதான் ஓர் ஆச்சர்யம் நிகழ்ந்தது. ஆம்! சென்னையிலிருந்து திரு. ஏ.என். தியானேஸ்வரன் I.A.S. இணைச் செயலாளர் அவர்களும் அவருடைய குடும்பமும் நண்பர்களும் கார்களிலே நெமிலி ஸ்ரீ பாலா பீடத்துக்கு வந்தனர். அப்படியே அம்பாளைக் கண்டு வீழ்ந்து வணங்கினர்.

நாங்கள் மெல்ல விவரம் கேட்டோம். கொடுவிலார்பட்டி ஸ்ரீ சச்சிதானந்த ஆஸ்ரமம் தேவி உபாசகர் தவத்திரு பரஞ்சோதி ஸ்வாமிகள், அவர்களையெல்லாம் நெமிலி ஸ்ரீ பாலாவைத் தரிசனம் செய்யுமாறு அன்புக் கட்டளையிட்டதையும் அதன்படி இன்று அவர்கள் வந்ததையும் கூறினர். அர்ச்சனைக்கும் அபிஷேகத்துக்கும் கொண்டு வந்த பொருள்களை எடுக்கும்போது நாங்கள் மெல்ல அவர்களிடம் "இன்று சந்திர கிரகணம்" என்பதையும், 9¾-க்குதான் கிரகணம் முடிகிறது என்பதனையும் கூறினோம்.

அவர்களோ திகைத்து விட்டார்கள்! "நாங்கள் அம்பாளைத் தரிசிக்க வேண்டும் என்ற ஆர்வத்தினாலும் அவசரத்தினாலும் திடீரென்று கிளம்பி விட்டோம்! கிரகணம் என்பதுகூட கவனிக்க வில்லையே. அது சரி! எல்லா சன்னிதிகளும் மூடிக்

கிடக்க வேண்டிய இந்த சந்திர கிரகண நேரத்தில் இங்கே பாலாவின் சன்னிதி மட்டும் திறந்திருக்கிறதே! எப்படி?" என்று கேட்டனர்.

உடனே நாங்கள் "எவ்வளவோ முன்னேற் பாடுகள் செய்தும் அன்னையின் சன்னிதியைச் சாத்தத் தவறி விட்டோம். 9¾-க்கு மேலே எல்லாரும் குளித்து 10½ மணிக்கு அபிஷேக ஆராதனை நடத்தலாம்" என்று கூறினோம்.

அதற்கு "நாங்கள் அவசரமாக சென்னையிலே இரவு 10½ மணிக்கு இருந்தே ஆகவேண்டும். இல்லை யென்றால் இருந்தே போகலாம்! நாங்கள் அன்னையைத் தரிசித்த காட்சியே அற்புதமாக உள்ளது" என்று கூறினார்.

நான் திகைத்துவிட்டேன்! பாலாவே! என்ன இது அற்புதம். "எனது பிள்ளைகள் என்னைப் பார்க்க ஆர்வத்துடன் அவசரத்துடன் சென்னையை விட்டு கிளம்பி விட்டார்கள். இங்கே 7½ மணிக்கு வரப் போகிறார்கள்! அவர்கள் இங்கே 10½ மணி வரை தாங்க இயலாது! 8½-க்கே கிளம்பினால்தான் சென்னைக்கு 10½-க்கு போக இயலும். ஆகவே உங்களுக்கெல்லாம் மறதியைத் தந்து எனது கதவை எனது பிள்ளைகளுக்காக நான் திறந்து வைக்கப் போகிறேன்! அவர்கள் வந்து என்னை தரிசனம் செய்து ஆனந்தமாகச் செல்லட்டும். ஆர்வத்துடன் "அன்புடன் 100 கிலோ மீட்டர் தூரத்தினின்று வருகிற அவர்கள் சன்னிதி மூடியிருந்தால் மனச்சங்கடம் அடைய மாட்டார்களோ? சென்னையில் 10½-க்கு இருக்க வேண்டிய அவர்கள் என்னைக் காணாமலேயே திரும்பிவிட்டால் அவர்களுக்கு எவ்வளவு வருத்தம். அதற்காகத்தான் நான் உங்களை மறக்க வைத்து எனது

தரிசனம் தந்தேன். நீதான் எழுதியிருந்தாயே "நாளும் கோளும் ஏது - சிவ நாயகி துணைவரும்போது" என்று. சிவ நாயகி துணையாக அவர்களுக்கு இருக்கையிலே சந்திர கிரகணமென்ன! சூரிய கிரகணமென்ன! நாளும் வேண்டாம். கோளும் வேண்டாம். நான் பார்த்துக் கொள்கிறேன் என்று கூறுவது போல இப்படிச் சிரிக்கிறாயே!" என்று கதற வேண்டும் போலிருந்தது.

திரு. தியானேஸ்வரன் அவர்கட்கு ஆச்சரியம் தாங்கவில்லை. அன்னையின் கருணையை வியந்து வியந்து மகிழ்ந்தார்கள்.

ஸ்ரீ பரஞ்சோதி ஸ்வாமிகட்கு இந்த விவரம் கூறி கடிதம் எழுதியதும் அவர் பிரமிப்பில் ஆழ்ந்தார்.

அடேயப்பா! சந்திர கிரகணத்தன்றும் தனது குழந்தைகளுக்காக அன்னை பாலா இப்படி தனது சன்னிதியைத் திறந்து வைப்பாளோ! இப்படியும் நடக்குமா? இப்படியும் நடக்குமா! என்று எண்ணி எண்ணி வியப்பதைத் தவிர வேறு செய்வதற்கு என்ன உண்டு!

அந்த தேவியின் ரகஸ்யம் யார் அறிவார்!

நாளும் கோளும் ஏது-சிவ நாயகி துணை வரும்போது!

# இன்னிசையில் மயங்கும் இறைவி

அன்னை பாலாவின் அன்புப்பிள்ளை பத்ம ஸ்ரீ டாக்டர் சீர்காழி. கோவிந்தராஜன் அவர்கள் அமரரான பிறகு அவரசு இசைப்பணியை அவரது அருமைப் புதல்வர் டாக்டர் சீர்காஜி ஜி. சிவசிதம்பரம் அவர்கள் ஒவ்வொரு ஆண்டும் அன்னை பாலாவின் சன்னிதியிலே தொடர்கிறார்.

ஒரு தடவை அவர் பாலாவின் சன்னிதியில் அம்பாளைத் தரிசனம் செய்து கொண்டிருந்த போது "இந்த ஆண்டு நான் எப்படியாவது மருத்துவத்தில் எம்.டி. ஆக வேண்டும். அன்னை பாலாதான் ஆசிகள் அளிக்க வேண்டும்" என வேண்டினார்.

அடேயப்பா! அடுத்த ஆண்டு அவர் மருத்துவத்தில் எம்.டி. பட்டம் பெற்றவராக அன்னையின் சன்னிதியிலே இன்னிசை பொழிந்தார். ஆயிரக்கணக்காகக் கூடியிருந்த இசை ரசிகர்கள் மத்தியிலே அன்னை பாலா தனக்கு இப்படி அருள் புரிந்தமையை மிகரும் உருக்கத்துடன் கூறினார்.

ஒரு தடவை அன்னையின் சன்னிதியில் அம்பாளுக்கு தமது வயலின் கச்சேரியை காணிக்கையாக வழங்க ஏழிசை ஏந்தல் திரைப்பட இசையமைப்பாளர் திரு. கலைமாமணி குன்னக்குடி வைத்யநாதன் தமது குழுவினருடன் வந்திருந்தார் பாலாவின் பீடத்திற்கு வெளியே பெரிய பந்தல் போட்டு மேடை அமைத்திருந்தோம். ஆயிரக் கணக்கான இசை ரசிகர்கள் குழுமியிருந்தனர். அவர் தமது பக்கவாத்தியங்களை மேடையில் அமரச் செய்து விட்டு தான் மட்டும் அம்பாளைத் தரிசிக்க உள்ளே சன்னிதிக்கு வந்தார். கச்சேரி முடிந்த பின் பக்கவாத்தியக்காரர்களுடன் அனைவரும் மீண்டும் சன்னிதிக்கு வருவதாக ஏற்பாடு.

உள்ளே அவர் வந்ததும் அவரிடம் மெல்ல "சார்! வெளியே ரசிகர்களுக்காக கச்சேரி செய்தாலும் உள்ளே ஆத்மார்த்தமாக ஒரு பாடலை வருகின்ற இசைவாணர்கள் பாடுவது வழக்கம். திருமதி. வாணிஜெயராம், திரு. சீர்காழி, திரு. வீரமணி—ராதா, திரு. டி.எம். சௌந்தரராஜன், திரு. மலேசியா வாசுதேவன் போன்ற பலரும் இப்படிப் பாடியுள்ளனர். நீங்களும் அம்பாளின் முன்னாலே வயலினில் ஒரே ஒரு கீர்த்தனையை மட்டும் வாசித்து விட்டால் நன்றாக இருக்கும் எனக் கூறினேன். "இங்கு மைக் வசதி உண்டா" என்றார்.

"இல்லை சார். ஸ்டேஜில்தான் அந்த வசதிகள் செய்யப்பட்டுள்ளன" என்றேன்.

"மைக் இல்லாம வாசிச்சா எடுபடாது! நன்னா இருக்காது. நான் வெளியே வாசிக்கிறேனே' என்றார் அன்புடன். அவர் அன்புடன் காணிக்கை

யாக ஒரு பைசா கூட வாங்காமல் இந்தக் கச்சேரி செய்ய வந்துள்ளார். அவரிடம் இதற்கு மேல் வலியுறுத்துவது உசிதமல்ல" என்று அப்படியே விட்டு விட்டேன். சன்னிதியில் அம்பாளின் மந்திர புஷ்பத்தை குழந்தைகள் முதல் பெரியவர்கள் வரை கணீரென்று கூறி தீபாராதனை காட்டினார்களோ இல்லையோ "ஓ!" என்று அலறி விட்டார் குன்னக்குடி அவர்கள். நாங்கள் பதறிப்போய் "என்ன சார்" என்றோம். எழில்மணி! அம்மா இங்கே சத்தியமா பேசிண்டிருக்கா! ஓ! என்ன சான்னித்யம்! என்ன சான்னித்யம்! எனக்கு ஷாக் அடிச்சாப்பல இருக்கே! எல்லா பக்க வாத்யக்காரர்களையும் இங்கே வரச் சொல்லுங்கோ! மைக்கும் வேண்டாம் ஒண்ணும் வேண்டாம் சீக்கிரம்! சீக்கிரம்" என்று பரபரத்தார்.

உடன் பதறியடித்துக்கொண்டு பக்க வாத்தியக்காரர்கள் ஓடிவர அன்னையின் சன்னிதியில் 'மைக்'கே இல்லாமல் ஒரு மணி நேரம் ஆனந்தமாக வாசித்தார் அந்த வயலின் மேதை! என்னே இந்த விளையாட்டு! அது மட்டுமா இசை ரசிகர்களுக்காக வெளியிலும் சென்று மேடையில் மைக் வசதிகளுடன் இரண்டு மணி நேரம் அமுத மழையாக இன்னிசை வழங்கினார் அந்த புவனேஸ்வரியின் மகன்! நினைத்து நினைத்துப் பார்த்தும் எங்களால் பிரமிப்பை அடக்க இயலவில்லை. அது மட்டுமா! தமது பிள்ளைக்கு பல ஆண்டுகளாக முயற்சித்தும் தடைபடும் திருமண நிகழ்ச்சி விரைவில் நடக்க வேண்டும் என்ற குன்னக்குடி வைத்யநாதனின் கோரிக்கையை அம்பாள் மூன்றே மாதத்தில் நிறைவேற்றி விட்டாள்.

ஆஹா! விஜயசேக்ஷ மகாலில் இசை அரசிகள் சூல மங்கலம் சகோதரிகள் இன்னிசையோடு தமது மகன் திருமணத்தை ஜாம் ஜாமென்று முடித்தார் குன்னக்குடி.

இசையினைப் பருகிய அந்த இறைவி எப்படித் தான் மனக்குறைகளை அகற்றி விட்டாள் தாயே! பாலா! உன் கருணையே கருணை என கண்ணீர் விடத்தான் தோன்றுகிறது.

அது மட்டுமா! அம்பாளுக்கு இசைக் காணிக்கை புரிய சாயி அருட் செல்வர் திரு. மலேஷியா வாசுதேவன் நெமிலி பாலாவிடம் வந்தார். அன்னையின் பேரழகைக் கண்டு மகிழ்ந்தார். உள்ளம் உருக அன்னையின் சன்னிதியிலே பாடினார். வெளியே அமைந்திருந்த மேடையிலும் ரசிகர் களுக்காக இரண்டுமணி நேரம் இன்னிசை பொழிந்தார். இடையில் ரசிகர்கள் ஓரிரண்டு சினிமாப் பாடல்களாவது பாட வற்புறுத்தினர். என்ன செய்வதென்று திணறிய மலேஷியா வாசுதேவன் அவர்கள் என்னைப் பார்த்தார். "பரவாயில்லை! அன்னைக்கு எல்லாம் தெரியும்! பாடுங்கள்" என்றேன். அவரும் அவரது புதல்வரும் இரண்டு சினிமா பாடல்களைப் பாடினர். அதைத் தொடர்ந்து பக்திப் பாடல் பாடி இன்னிசை நிகழ்ச்சியை நிறைவு செய்தார். மனதுக்குப் பிடித்தமில்லாமல் சினிமா பாடல் பாட நேர்ந்ததை வருத்தமாகக் கூறினார். அவர் இன்னிசையை டேப் செய்திருந்தனர். அதை அவர் கேட்க ஆசைப்பட்டார். அதனை டேப்ரிகார்டரில் போட்டோம். என்ன ஆச்சரியமும் அவர் சினிமா பாடல் பாடுவதற்கு முன்னால் உள்ள பாடல்கள் பதிவாகியிருந்தன. அவர் சினிமா பாடல்களைப்

பாடியது பதிவாகாமல் "உம்" என்ற மெல்லிய ஒரு சத்தம். அதைத்தொடர்ந்து இறுதியில் அவர் அம்பாள் பாடலைப் பாடிய போது அது பதிவாகியிருந்தது.

மலேஷிய வாசுதேவன் பதறிப் போய் விட்டார். "அடடா! என்ன இது அதிசயம்! முன்னாலும் பின்னாலும் பதிவாகியுள்ளது. இடையில் பதிவாகவில்லையே! எனது மனவேதனை அறிந்து அன்னை இந்த அற்புதம் செய்தாளோ! சினிமா பாடலுக்கு பதில் 'உம்' மென்ற சத்தமல்லவா பதிவாகியுள்ளது! உமாமகேஸ்வரியே! இதுவும் உன் விளையாடலா?" என்று கதறி விட்டார்.

தனது மகன் மனத்தை சந்தோஷப் படுத்துவதில் தான் அவளுக்கு எத்தனை அக்கறை! ஆர்வம்!

அன்னை பாலாவின் அற்புதங்களை விவரிக்க வார்த்தைகளும் போதுமோ?

# அருள் கொடுக்கும் அன்னை பாலா

அருள் கொடுத்து இருள் தடுக்கும் அன்னை பாலா அன்புடன் உறைவது நெமிலி என்னும் அழகான் ஊரில்.

வட ஆற்காடு அம்பேத்கார் மாவட்டம் அரக்கோணம் வட்டத்தைச் சேர்ந்தது நெமிலி.

அரக்கோணத்திலிருந்து 16 கிலோ மீட்டர் தொலைவிலும், காஞ்சிபுரத்தினின்று 25 கிலோ மீட்டர் தொலைவிலும் சென்னையிலிருந்து 100 கி.மீ. தொலைவிலும் அழகு நெமிலி அமைந்துள்ளது.

வைதீக வேந்தர் நெமிலி ஸ்ரீ டி.கே. சுப்ரமண்ய ஐயர் அவர்களின் குடும்பம் கடந்த 100 ஆண்டுகளுக்கும் மேலாக அம்பாளை தமது இல்லத்தில் வைத்து சிறப்பாக பூஜை செய்து வருகின்றனர்.

ஓர் இல்லத்தில் அமைத்து ஒரு குடும்பத் தினரால் அகண்ட கூடத்தில் அம்பாள் பூஜை நடத்தப்

பட்டு வந்தாலும் அனைவருக்கும் தரிசனம் செய்வித்து அம்பாள் மகிமையை எடுத்துக் கூறி வருகின்றனர். தமது சொந்த இல்லம் என்றும், தமது குடும்ப தெய்வம் என்றும் இருந்த போதிலும் வருகின்ற அனைவரையும் எந்தவிதப் பாகுபாடும் காண்பிக்காமல் அனைவரும் தொழ அனுமதிக்கும் அந்தப் பண்பு அன்னை பாலா அளித்ததாகும். அம்பாளின் அபிஷேகம் ஒவ்வொரு வெள்ளிக்கிழமை மாலை 6 மணி முதல் இரவு 8 மணி வரை நடைபெறுகிறது. அபிஷேகம், அர்ச்சனை, ஆராதனை என அன்பர்கள் அனைவரும் திரண்டு வருகிறார்கள்.

பிரதி ஞாயிற்றுக் கிழமைகளில் காலை 9 முதல் 1 மணி வரை சிறப்பு வழிபாடு நடைபெறுகிறது.

அம்பாளுக்கு நவராத்திரியில்தான் பிரம மோற்சவம். நவராத்திரி ஒன்பது நாட்களிலும் பிரதி தினம் காலையில் மஹன்னியாஸ பூர்வக ருத்ரா பிஷேகம், சூர்ய நமஸ்காரம், தேவி பாகவதம், சப்தசதி பாராயணம், சஹஸ்ரநாம அர்ச்சனைகள், மாலையில் குங்கும அர்ச்சனாதிகள், காலை-மாலையில் ஸுவாஸின்யாதி சந்தர்ப்பணைகள், நவமியன்று ஹவனம் முதலியவை மிகவும் சிறப்பாக நடைபெறுகின்றது.

அம்பாளுக்கு நடைபெறும் மஹா சண்டி ஹோமம் மிகரும் பிரசித்தம். அனைவரும் ஈரத் துணியுடன் அன்னையின் சண்டி ஹோமத்திலே பங்கேற்று ஹோமகுண்டத்தைச் சுற்றி வந்தால் தோஷங்கள் நீங்கும்! சந்தோஷம் ஓங்கும். நவராத்திரி

ஒன்பது நாட்களிலும் மாலையில் உபன்யாசங்களும் இரவில் இன்னிசைகளும் பரதநாட்டிய நிகழ்ச்சிகளும் நடைபெறுகின்றன.

நவராத்திரி ஒன்பது நாட்களும் அன்னையின் சன்னிதி மூடுவதே இல்லை. எந்தநேரம் வேண்டு மானாலும் அம்பாளைத் தரிசனம் செய்யலாம்.

புத்தாண்டு தினங்கள், தை வெள்ளி, ஆடி வெள்ளி ஆகிய நாட்களில் சிறப்பு வழிபாடுகள் உண்டு.

திருமணம் முடிக்கும் திரிபுரசுந்தரி, என்பதனால் அன்பர்கள் தபாலிலே தமது பிள்ளைகளின் ஜாதகத்தை அனுப்புவதும் வழக்கம். அதனை அம்பாள் பாதங்களில் வைத்து விட்டு பிரசாதம் அனுப்பப்படும். மிக விரைவில் அவர்கள் தம்பதி சமேதரராக அம்பாளின் சன்னிதிக்கு வருகிறார்கள்.

அன்னை பாலாவின் அருட்கடாட்சம் அகிலமெல்லாம் நிரம்பி வழிகிறது. அவளால் அழைக்கப்படுபவர்கள் மட்டுமே அங்கு வரமுடிகிறது என்பது உண்மை. ஆண்டாண்டுக் காலமாக வரவேண்டும் என முயன்று இன்னமும் வராமல் ஏக்கப்படுபவர்கள் அனேகம்.

நினைத்த ஒரு வாரத்திற்கெல்லாம் அன்னை யின் சன்னிதிக்கு வந்து நிம்மதி பெறுபவர்களும் ஏராளம். ஆக அவள் நம்மை அழைக்கும்போதுதான் அவளைக் காண இயலும். இடைவிடாது அந்த தேவியைப்பற்றி சிந்தித்தால் அவளால் தாங்க முடியாது! அதுவும் மனம் உருகி நீதான் சரணாகதி எனக் கண்ணீர் விட்டால் போதும். உடனே

அழைத்துக் கொள்வாள்! அழுகையைக் கண்டால் அவள் மனம் பொறுக்காது!

இனி அவளது இனிய பாடல்களைப் படிப்போம்! அந்த இறைவியின் பதமலர் பிடிப்போம்.

இசையை ரசிப்பதும் அவளே – அந்த
இசையாய் இருப்பதும் அவளே.

அவளைப் பற்றிய இசைப் பாடல்களை என்னை எழுத வைத்த அன்னையின் கருணைக்கு எப்படி நன்றி சொல்வேன்!

*அருள்மிகும் தேவி அன்னைபாலா*
*திரிபுர சுந்தரி சரணம்*
*இருள்தனை நீக்கும் தாயே பாலா*
*திரிபுர சுந்தரி சரணம்*



**நெமிலி ஸ்ரீ பாலா திரிபுர சுந்தரி பீடத்தின் முகவரி:**

நெமிலி ஸ்ரீ பாலா திரிபுரசுந்தரி பீடம்
22, சத்திரத் தெரு
நெமிலி – 631 051
வ.ஆ. அம்பேத்கர் மாவட்டம்

# நவராத்திரி தேனிசைப் பாடல்கள்

## கணநாதன் பாடல்

கணநாதன் அருள்நமக்கு வேண்டும்—தேவி
நவராத்ரி இசைமணக்க வேண்டும்
வினையாவும் உடன்போக வேண்டும்—வரும்
விக்னங்கள் அது நீங்க வேண்டும்—அந்த
(கணநாதன்)

கலசத்தை அவன்தாங்க வேண்டும்—அன்னை
கனிவோடு அதில் தோன்ற வேண்டும்
கலையாவும் அவன்அருள வேண்டும் வரும்
கவிதைகள் சுவைநிறைய வேண்டும்—அந்த
(கணநாதன்)

பூஜைகள் நிறைவேற வேண்டும்—உயர்
புண்ணியங்கள் நமைச் சேர வேண்டும்
ஆசைகள் கைகூட வேண்டும்—அவன்
அருளாலே இசைபாட வேண்டும்—அந்த
(கணநாதன்)

## நவாரத்திரி தேனிசை பாடுங்களே

நவராத்திரி தேனிசை பாடுங்களே
நயமான ஒன்பது ராகங்களே
சௌபாக்யம் தரும்அன்னை பாதங்களே—அதை
ஸ்ருதியோடும் லயத்தோடும் ஓதுங்களே

பூபாள ராகம் நீயே
புண்ணியம் செய்தாயே
புலரும் பொழுதினிலே புதிதாய் மலர்ந்தாயே
பூபாரம் தாங்குகின்ற பூமாதா எழுந்தாளே
புண்ணியம் தரும் கோயில் பொற்கதவு திறந்தாரே

பூபாள ராகம் நீயே
புண்ணியம் செய்தாயே. (நவராத்திரி)

ஆனந்த பைரவியே அன்புடன் வந்தாயே
அன்னையின் அழகான அபிஷேகம் கண்டாயே
நானிந்த நாயகியின் சேவகி என்றாயே
நாளும் அவள்பாட்டில் நீயும் கலந்தாயே
(நவராத்திரி)

அன்னையின் அலங்காரம் காணவந்தாய் நீயே
அற்புதமாய் அதனைப் பாடும் கல்யாணியே
விண்ணிலும் மண்ணிலும் அன்னைக்கு நிகரேது
வேதனைகள் தீரும் இனிதுயர் வராது
(நவராத்திரி)

அன்னை கொலுவிருக்கும் தர்பாரைப் பாரு
அனுபவித்து தர்பார் ராகமே நீ பாடு
என்னவரம் வேண்டும் கேட்பாய் பணிவோடு
அள்ளித் தருவாளே அன்னையும் கனிவோடு
(நவராத்திரி)

அன்னையின் புகழ்கூறும் அர்ச்சனை மந்திரம்
அதனையே பாடிட ரேவதி வந்திடும்
தன்னையே அன்னைக்கு காணிக்கை தந்திடும்
தாயவள் நெஞ்சிலே நீங்காது நின்றிடும்
(நவராத்திரி)

அஞ்சன வல்லிக்கு அமுது தந்தார் அதனை
அன்புடன் நைவேத்யம் என்று சொன்னார்
ரஞ்சனியே அதனைப் பாடவந்தாய்—இசை
நெஞ்சங்களில் நிலையாய் நீ நின்றாய்
(நவராத்திரி)

சிந்தையள்ளும் தீப ஆராதனை — அதனை
சிந்து பைரவி பாட வருமோ வினை
எந்த ஜென்மம் வரினும் ஜெகதீஸ்வரி—எங்கள்
சிந்தையிலே இருந்து எமைஆதரி
(நவராத்திரி)

மாலையில் வரும் மலய மாருதமே—சந்தியா
பூஜையைப் பாடுகின்ற மரகதமே
சோலையெல்லாம் பூத்த நறுமுல்லை—இரவில்
சன்னிதியில் மணம் வீசும் ஈடில்லை
(நவராத்திரி)

தாலாட்டும் நம் தாய்க்கும் தாலாட்டு—இது
தாயவள் புரிகின்ற விளையாட்டு
நீலாம்பரி நீயும் வருவாயே—அன்னை
பள்ளி கொள்ள இசையும் தருவாயே

(நவராத்திரி)

## அன்னை பாலா அருள்முகம்

அன்னை பாலா திரிபுர சுந்தரி
உள்ளே அருள்முகம் சுடராய்த் தெரிகிறது
அமைதியைத் தரவே நெமிலியில் அவளே
வந்தனள் என்பது புரிகிறது
ஓம் சக்தி ஓம் சக்தி ஓம்
ஓம் சக்தி ஓம் சக்தி ஓம்

(அன்னை பாலா)

வேதங்கள் ஒலிக்கும் நாதங்கள் முழங்கும்
விழிகளில் கண்ணீர் பெருகும்
பேதங்கள் நீங்கும் பாதங்கள் காக்கும்
புண்ணிய நிலைகள் சேர்க்கும்
இசையினை ரசிப்பதும் அவளே அந்த
இசையாய் இருப்பதும் அவளே

(அன்னை பாலா)

அன்ன தானமும் அமுத கானமும்
சன்னிதி அருகே நடக்கிறது
தன்னைப் பாடுவோர் தாபம் போக்கிடும்
தாயின் கருணையும் கிடைக்கிறது
கெண்ணென இருப்பதும் அவளே — நம்
கண்ணீர் துடைப்பதும் அவளே

(அன்னை பாலா)

## நவசக்தி வளம் கொடுக்கும் நவராத்திரி

நவசக்தி வரம்கொடுக்கும் நவராத்திரி—அந்த
நவக்கிரகமும் அருள்கொடுக்கும் நவராத்திரி
நவஜோதி ஒளிவீசும் நவராத்திரி—உயர்
நவமணியும் நமைச்சேரும் நவராத்திரி

(நவசக்தி)

மங்கலம் அளிக்கின்ற நவராத்திரி—எழில்
மங்கையர் தொழுகின்ற நவராத்திரி
குங்குமம் கொடுக்கின்ற நவராத்திரி—அன்னை
கொலுவினில் வீற்றிருக்கும் நவராத்திரி

(நவசக்தி)

மலைமகள் முதல்மூன்று தினங்களிலே—மன
மகிழ்ச்சியுடன் தருவாள் வரங்களையே
அலைமகள் வரும்மூன்று தினங்களிலே—அழகாக
அமர்வாள் அன்பர்களின் மனங்களிலே

(நவசக்தி)

கலைமகள் காட்சிதரும் கடைசி மூன்றுதினம்
கல்வியைக் கொடுப்பதுதான் செல்வியின் அரியகுணம்
மலைமகளும் அலைமகளும் கலைமகளும் சேரும்
மங்கல நவராத்திரி மகிழ்ச்சியை அள்ளித்தரும்

(நவசக்தி)

## புரட்டாசி மாதம் வந்தது

புரட்டாசி மாதம் வந்தது—
மலர் பூத்தது
புகழ்கூறும் நவராத்திரியில்
நலம் சேர்த்தது
வரம்யாவும் தருவதற்கே வந்தது—
நல்ல வளமான எதிர்காலம் தந்தது
(புரட்டாசி)

அருள்யாவும் தரும் அன்னை திருமுகம்—அவள்
அன்பாலே வளம்யாவும் அறிமுகம்
இருள்நீக்கும் அவள்பாட்டு தரும்சுகம்—எங்கள்
இறைவியின் அழகான ஒளிமுகம்
(புரட்டாசி)

அப்பனான ஈசனுக்கு ஒருராத்திரி—அது
சிவராத்திரி—எங்கள்
அன்னையான ஈஸ்வரிக்கோ நவராத்திரி—அது
சுபராத்திரி
எப்பொழுதும் அன்னைதானே உடன்
வருவாள்—நாம்
எதைக்கேட்டு அழுதாலும் அவள் தருவாள்
(புரட்டாசி)

## பாலா அவதரித்தாள்

பாலா அவதரித்தாள்—எங்கள்
பாலா அவதரித்தாள்
பாவியாம் மகிஷனை தீர்ப்பதற்காக
தேவரைக் காத்து மீட்பதற்காக
(பாலா)

ஒன்பது இரவுகள் தவமிருந்தாள் — அவள்
ஒவ்வொரு நாளும் விரதமிருந்தாள்
துன்பமே தந்திடும் அசுரனையே — அவள்
தொலைத்திட நல்ல முடிவெடுத்தாள்
(பாலா)

நவமியின் இறுதியில் புறப்பட்டாள் — அவனை
நாசம் செய்திடத் தலைப்பட்டாள்
தசமியில் வெற்றிக் கொடிபிடித்தாள்—அவள்
தஞ்சமே தந்து கதைமுடித்தாள்—எங்கள்
(பாலா)

## ஒன்பது இரவும் அம்மனை எண்ணி இன்னிசையோடு பாடு

ஒன்பது இரவும் அம்மனை எண்ணி
இன்னிசையோடு பாடு—நீ
அன்புடன் வேண்டி அன்னையின் அழகுக்
கோயிலை என்றும் நாடு

(ஒன்பது இரவும்)

சக்திக்கு நாளும் மலர்களினாலே
எத்தனை எத்தனை அலங்காரம்—அந்த
சக்தியின் அருளால் சென்று மறைந்தது
சிந்தையில் கொண்ட அகங்காரம்
முத்திரை பதித்த சூலம் —அது
முக்தியைக் காட்டும் கோலம்
வித்தைக்கு அவள் தலைவி—நம்
வேதனை நீக்கும் இறைவி

(ஒன்பது இரவும்)

மஞ்சள் குங்குமம் வஞ்சனையின்றி
வழங்கிடும் பண்டிகை நாளாகும்
பஞ்சம் நீங்கி பாரினில் மாந்தர்
துயரம் யாவும் தூளாகும்
தஞ்சம் நீயே என்றால்—அவள்
தாயாகக் காட்சி தருவாள்
வஞ்சம் இல்லா நெஞ்சில்—அவள்
கோயில் கொண்டு வருவாள்
(ஒன்பது இரவும்)

## நவராத்திரி கொலு காணும் ஸ்தல யாத்திரை

நவராத்திரி கொலு காணும் ஸ்தல யாத்திரை—அன்னை
தவக்கோலம் நாம் காணும் சுபயாத்திரை
அன்பர்களே வாருங்கள் அன்னை முகம் பாருங்கள்
துன்பங்களைத் தீருங்கள் இன்பங்களைச் சேருங்கள்
(நவராத்திரி)

காமாட்சி கொலுவிருக்கும் காஞ்சிநகர் செல்வோம்
கரும்பு வில்லேந்தும் காட்சியினைக் காண்போம்
மீனாட்சி கொலுவிருக்கும் மதுரைநகர் செல்வோம்
மாதவளை பச்சைக்கிளி கொஞ்சும் காட்சி காண்போம்
(நவராத்திரி)

அன்னைபாலா வீற்றிருக்கும் அழகுநெமிலி செல்வோமே
அவளேநடத்தும் சண்டிஹோமக் காட்சியினைக் காண்போமே
புன்னைமரத்தின் அருகில்தவம் பண்ணுகின்ற கற்பகத்தை
கண்ணால் காண மயிலைநகர் சென்றுநாமும் தொழுவோமே
(நவராத்திரி)

ஆனைக்காவில் அருள்தரும் அகிலாண்ட ஈஸ்வரி
அழகான கொலுவினை அகம்குளிரப் பார்ப்போம்
ஆனைகளும் புடைசூழ அன்னையாம் சாமுண்டி
கொலுவிருக்கும் மைசூரில் தசராவைக் காண்போம்

(நவராத்திரி)

# மஹா சண்டி ஹோமம்

மஹா சண்டி ஹோமம் ஓம்
மகா துர்க்கை நாமம்
மகா பாபம் போக்கும்—அது
மனதில் இன்பம் சேர்க்கும். (மஹா)

சதா அவளை தியானி—துயர்
சுமை நீக்கும் ஞானி
பதாம் புஜம் தோணி—அவள்
பாடல் உயர்த்தும் ஏணி. (மஹா)

அகிலம் காக்கும் இறைவி—அவள்
ஆடல் அரசனின் துணைவி
மகிஷன் என்னும் பாவி—அவனை
மர்த்தனம் செய்த தேவி. (மஹா)

அயிகிரி நந்தினி நந்தித மேதினி
விஸ்வ விநோதினி நந்த நுதே
கிரிவர வந்த்ய சிரோதி நிவாஸினி
விஸ்ணு விலாஸினி ஜிஷ்ணு னுதே

பகவதி ஹேசிதி கண்ட குடும்பினி
பூரி குடும்பினி பூரி க்ருதே
ஜெய ஜெயஹே மகிஷாசுர மர்த்தினி
ரம்ய கபர்த்தினி சைல ஸுதே.

## அருள் மிகும் தேவி அன்னை பாலாவின் கவசம்

| | | |
|---|---|---|
| பாடியவர் | : | பத்மஸ்ரீ இசைமணி டாக்டர் சீர்காழி எஸ். கோவிந்தராஜன் |
| இசை | : | கலைமாமணி டி.ஆர். பாப்பா |
| இயற்றியவர் | : | கவிஞர் நெமிலி எழில்மணி |

* * *

## கண்பதி துதி

ஓங்கார கண்பதி ரீங்கார கண்பதி
உன்பதம் நாடுகின்றேன்
உன்னருள் துணையாலே என்னவள் கவசத்தை
உளமுருகிப் பாடுகின்றேன்
தீங்கேதும் வாராது நீங்காத துணையாக
தும்பிக்கை வேண்டுகின்றேன்
தேனான சுவையோடு தெய்வீக ஒளியோடு
தெய்வமே ஆண்டருள் வாய்

பாங்கான தேவியாம் பாலா திரிபுர
சுந்தரி திருக்கவசமே
பாலோடு தோக பாகோடு தானாக
செய்வதும் நினதுவசமே
ஏங்காத நிலையருள் ஏத்திடும் வரமருள்
எந்நாளும் காத்திருப்பாய்
ஏழையேன் என்னுடை அன்பினை வைக்கிறேன்
இதயத்தில் பூத்திருப்பாய்

## கவசம்

அன்னையாம் பாலா திரிபுர சுந்தரி
அருள்தனை நீ பாடுவாய்
அன்னையைத் தேடுவாய் அன்னையைத் தேடுவாய்
அன்போடு நீ தேடுவாய்
அன்னையை நாடுவாய் அன்னையை நாடுவாய்
அவள்பதம் நீ நாடுவாய்
அன்னையின் அருகினில் ஆடுவாய் ஆடுவாய்
ஆனந்தமாய் ஆடுவாய்

பாலா எனச்சொல்லு பாலா எனச்சொல்லு
பவவினை யாவும் தள்ளு
பாலா எனக்கூறு பாலா எனக்கூறு
பாதார விந்தமே சேரு
பாலாஎனப் பாடு பாலாஎனப் பாடு
பாலாவின் கருணையைத் தேடு
பாலா என்றேஓது பாலா என்றேஓது
பாலாவினால் மறையும் தீது

திரிபுர சுந்தரி திருவடித் தாமரை
தினம்வந்து நமைக் காக்குமே
திரிபுர சுந்தரி திருவிழிப் பார்வையில்
தெய்வீக நிலை பூக்குமே
திரிபுர சுந்தரி திருக்கரம் படுவதால்
தீமைகள் தான் விலகுமே
திரிபுர சுந்தரி திருமுடி காண்கையில்
தேன்வாழ்வு தான் மலருமே

பாலாவை நீபாடு பங்காரு காமாட்சி
பாங்கான உரு தெரியுமே
பாலாவை நீநோக்கு மதுரையாள் மீனாட்சி
புன்னகை தான் புரியுமே
பாலாவை நீகாணும் போதந்தக் காசியாள்
விசாலாட்சியை அறிகு வாய்
பாலாவின் தோற்றத்தில் மயிலையின் கற்பகம்
பலவரம் தான் அருளுவாள்

இல்லையென்று பாலா திரிபுர சுந்தரி
யாருக்கும் சொன்னதில்லை
இன்பத்தினை நாடும் அன்பர்க்கு கருணையை
ஈயாது விட்டதில்லை
தொல்லையென்று அவள் எல்லையில் வந்தோர்க்கு
துயரேதும் வந்ததில்லை
தூயவள் அவளுக்கு அருளதைப் பொழிவதில்
சாதிகள் மதமுமில்லை.

அன்னையாம் பாலா திரிபுர சுந்தரி
அன்புக்கு எல்லையில்லை
அம்மைக்கு செல்வர் ஏழையர் என்கின்ற
பேதங்கள் ஏதுமில்லை
தன்னையே வேண்டிடும் அன்பர்க்கு அருளை
தாராமல் போனதில்லை
தாயவள் பாசமே பொழிவதில் ஆகாய
மாரியும் இணையுமில்லை

காயத்ரியாகவே கண்களைக் காப்பாள்
சிவசக்தி சிரமே காப்பாள்
காளியாள் வந்து கரங்களைக் காப்பாள்
கௌமாரி கால்களைக் காப்பாள்
மாயையை நீக்கி மகேஸ்வரி காப்பாள்
மாதாவாய் மனத்தைக் காப்பாள்
மூகாம்பிகை என்று முகத்தையே காப்பாள்
மோகினி மூளை காப்பாள்

தாய்தில்லைக் காளியாள் தலையினைக் காப்பாள்
தர்மாம்பா தோளைக் காப்பாள்
தில்லைசிவ காமியாள் தொடையினைக் காப்பாள்
துர்க்கையாள் தொண்டை காப்பாள்
காய்நிலவு அபிராமி கழுத்தினைக் காப்பாள்
வைஷ்ணவி வயிறு காப்பாள்
கருமாரி யாய்வந்து குரல்வளம் காப்பாள்
காந்திமதி காது காப்பாள்

அருள்மிகும் தேவி அன்னை பாலா திரிபுர
சுந்தரி பெயர் மந்திரம்
அமைதியே தந்திட நெமிலியில் வந்தனள்
அவள்திரு வடி எந்திரம்
இருள்தனை நீக்கிடும் தாயவள் விழிகளே
இன்துணை என வந்திடும்
இன்முகத் தேவியை உன்னகம் வைத்திடு
எல்லாமே தான் தந்திடும்

மருள்தனை நீக்கிடும் மாதாவின் கவசமே
மனமொன்றி நீ கூறுவாய்
மகிழ்ச்சியைத் தந்திடும் மாதாவின் கவசமே
மலரடி நீ சேருவாய்
பொருள்தனைக் கொடுத்திடும் பாலாவின் கவசமே
புவியினைக் காக்கும் நிசமே
புகழ்நிறை நெமிலியில் பொலிகிறாள் சத்தியம்
புகலிடம் அவள் நித்தியம்

அமைதியைப் பெற்றிட அன்பர்கள் அனைவரும்
அவளையே நாட வேண்டும்
சுமைகளைக் குறைத்திடும் சுந்தரி இல்லத்தில்
சந்ததம் பாட வேண்டும்
இமையது கண்களைக் காப்பது போல் கவசம்
எந்நாளும் காக்க வேண்டும்
நெமிலியில் எழில்மணி பணிவுடன் எழுதிய
கவசமே பூக்க வேண்டும்

பாலாவின் கவசத்தைப் பாராயணம் செய்தால்
பலவினை தான் போகுமே
பாலாவின் கவசத்தைப் பாராயணம் செய்தால்
தவவினை நமைச் சேருமே

ஓம்! ஓம்!! ஓம்!!!

## அருள்மிகும் தேவி அன்னையாம் பாலா திரிபுர சுந்தரி தேவியைப் பற்றி

# நூற்றியெட்டு போற்றி

அருள்கொடுக்கும் பாலாவே அம்பிகையே போற்றி
ஆற்றினிலே வடிவெடுத்த ஆரணங்கே போற்றி
இருள்தடுக்கும் எங்கள்குலத் தாயவளே போற்றி
ஈகையினை வளர்க்கின்ற தூயவளே போற்றி 4

உலகத்தை ஆளுகின்ற ஓங்காரி போற்றி
ஊழ்வினையை மாற்றுகின்ஹ ஒய்யாரி போற்றி
எழில்நிறைந்த அம்மாநின் இணையடிகள் போற்றி
ஏற்றமெல்லாம் அருள்கின்ற திருவடிகள் போற்றி 8

ஐஸ்வர்யம் அளிக்கின்ற ஈஸ்வரியே போற்றி
ஒற்றுமையை விதைக்கின்ற உத்தமியே போற்றி
ஓதிடவே அரிதான வித்தகியே போற்றி
ஔடதமாய் ஆனவளே அம்மாவே போற்றி 12

ஸ்ரீ பாலா திரிபுர சுந்தரியே போற்றி
சீர்நிறைந்த நெமிலிநகர் செல்வமகள் போற்றி
ஸ்ரீ வித்யா வடிவான ஸ்ரீ துர்க்கை போற்றி
ஸ்ரீ மாதா ஸ்ரீ தேவி ஸ்ரீ பாதம் போற்றி 16

சீர்காழி வாழுகின்ற செந்தமிழே போற்றி
சிறப்போடு ஞானப்பால் தந்தவளே போற்றி
பேர்வாழ தமிழிசையாய் உற்றவளே போற்றி
பெருமைதரும் பிள்ளைகளைப் பெற்றவளே போற்றி 20

திருவதிகை அருள்கின்ற பெருமகளே போற்றி
திருவான்மியூர் வாழும் திருவருளே போற்றி
திருக்கழுக் குன்றத்தின் தேவியே போற்றி
திரிசூலம் வளர்கின்ற மகராசி போற்றி 24

காஞ்சியிலே காமாட்சி வடிவானாய் போற்றி
மதுரையிலே மீனாட்சி உருவானாய் போற்றி
காசியிலே விசாலாட்சித் தாயானாய் போற்றி
கடவூரில் அபிராமி நீயானாய் போற்றி 28

நவராத்ரி கொலுமேவும் நாயகியே போற்றி
நவசக்தி நிலையருளும் நர்த்தகியே போற்றி
நவஜோதி ஒளிவீசும் நாரணியே போற்றி
நவமணிகள் அணிகின்ற பூரணியே போற்றி 32

கருமாரி உருவான கண்மணியே போற்றி
கற்பகமே வடிவான வெண்மதியே போற்றி
அருள்சிந்தும் மூக்குத்தி ஒளியானாய் போற்றி
அருள்ஞானக் கடல்மூன்றின் நிலையானாய் போற்றி 36

கண்ணீரைத் துடைக்கின்ற கல்யாணி போற்றி
கவலையை எடுக்கின்ற காளியே போற்றி
புண்ணியமே தரவல்ல புவனேசி போற்றி
பொன்மாரி பொழிகின்ற முத்துமாரி போற்றி 40

குங்குமமே தருகின்ற கோதைமகள் போற்றி
குழந்தையாக வருகின்ற கோமளமே போற்றி
மங்கலமே அருள்கின்ற மாகாளி போற்றி
மஞ்சளிலே நிறைகின்ற மாதாவே போற்றி 44

திருமணமே முடிக்கின்ற திரிபுரையே போற்றி
தேவைகளை நிறைவேற்றும் வாரிதியே போற்றி
பொருளினையே அளிக்கின்ற பொன்மகளே போற்றி
புவிதனையே ஆள்கின்ற பெண்மகளே போற்றி 48

நன்மைகளைப் புரிகின்ற நாயகியே போற்றி
நன்மனதில் வாழுகின்ற நான்முகியே போற்றி
புன்மைகளைப் போக்குகின்ற புனிதவதி போற்றி
பூதலமே காக்கவந்த கருணைநிதி போற்றி 52

சங்கடமே தீர்க்கின்ற சங்கரியே போற்றி
சந்தோஷம் அளிக்கின்ற சாம்பவியே போற்றி
மங்கையர்க்கு அரசியான மாலினியே போற்றி
மங்காத வாழ்வளிக்கும் மகராசி போற்றி 56

உவமைசொல்ல அரிதான உமையவளே போற்றி
ஊழ்வினையை மாற்றுகின்ற ஒளிப்பொருளே போற்றி
பவபயத்தை நீக்கவந்த பார்வதியே போற்றி
பாடுவோர்க்கு கூடுகின்ற நிம்மதியே போற்றி 60

பச்சிளம்பெண் வடிவான பாலாவே போற்றி
பாதமலர் நீதருவாய் மாதாவே போற்றி
இச்சையெலாம் தீர்த்துவைக்கும் இன்னமுதே போற்றி
ஈசன்பாதி ஆனவளே இனியவளே போற்றி 64

பூத்தவளே அபிராமி போன்றவளே போற்றி
பவழமல்லி மாலைகளைப் பூண்டவளே போற்றி
மூத்தவளே மூவுலகும் காத்தவளே போற்றி
முன்வந்து நல்வழியில் சேர்ந்தவளே போற்றி 68

தரித்திரமே நீக்குகின்ற தேன்மாரி போற்றி
தண்ணருளே பொழிகின்ற வான்மாரி போற்றி
சரித்திரமே படைப்பவளே சத்தியமே போற்றி
சன்மார்க்கம் கொடுக்கின்ற சாமளையே போற்றி 72

ஆடிவெள்ளி ஓடிவரும் ஆரணங்கே போற்றி
கோடிக்கோடி அர்ச்சனையில் குளிர்பவளே போற்றி
பாடிவரும் பாடல்கேட்டு ஆடிடுவாய் போற்றி
பக்தரையே எந்தநாளும் தேடிடுவாய் போற்றி 76

அருள்வாக்கு தருகின்ற அம்பிகையே போற்றி
அற்புதங்கள் செய்துவரும் அலங்காரி போற்றி
இருள்நீக்கும் எங்கள்குல ஈஸ்வரியே போற்றி
இன்னிசையில் லயிக்கின்ற ஏழிசையே போற்றி 80

மந்திரமாம் வேதகோஷம் கேட்பவளே போற்றி
மலராக கவசத்தில் பூப்பவளே போற்றி
விந்தைபல புரிந்திட்ட வித்தகியே போற்றி
வேண்டும்வரம் தருகின்ற நர்த்தகியே போற்றி 84

கலசத்தில் தோன்றிடும் காயத்திரி போற்றி
கலக்கத்தை போக்கிடும் கலைவாணி போற்றி
உலகத்தை வாழ்விக்கும் உத்தமியே போற்றி
ஊருக்கெல்லாம் நீதான் உபகாரி போற்றி 88

என்னவரம் கேட்டாலும் கொடுப்பவளே போற்றி
ஏதுபிழை செய்தாலும் பொறுப்பவளே போற்றி
மன்னனுக்கும் ஏழைக்கும் மாதாவே போற்றி
மாயையை நீக்குகின்ற பாதாரம் போற்றி 92

கண்ணைஇமை காப்பதுபோல் காப்பவளே போற்றி
கஷ்டமெல்லாம் ஒருநொடியில் தீர்ப்பவளே போற்றி
தண்மதியே தமிழ்மொழியே தாமரையே போற்றி
தளர்வறியா மனம்தரும் நாமகளே போற்றி 96

வெள்ளமதில் வந்தவளே வேதவல்லி போற்றி
வேதனைகள் போக்குகின்ற நாதவல்லி போற்றி
உள்ளமதில் வாழுகின்ற உயர்பொருளே போற்றி
ஊமைகளைப் பேசவைக்கும் திருமகளே போற்றி 100

புண்ணியத்தைத் தரவல்ல பூமகளே போற்றி
பூர்வஜென்ம வினைபோக்கும் பாமகளே போற்றி
எண்ணியதை நிறைவேற்றும் எம்தாயே போற்றி
எழில்மணக்கும் கவிதையினைத் தந்தாயே போற்றி 104

நெமிலிநகர் உறைகின்ற நித்திலமே போற்றி
நெஞ்சினிலே எழுதிவைத்த சித்திரமே போற்றி
அமைதியினை வழங்குகின்ற திரிபுரையே போற்றி
அருள்ஞான பாலாநின் கழல்போற்றி! போற்றி!! 108

(அருள்மிகும் தேவி அன்னை பாலாதிரிபுர சுந்தரியின் இந்த நூற்றியெட்டு போற்றியை கருத்துடன் ஓதி வந்தால் அல்லல்கள் நீங்கும்; நல்லவை சேரும், ஸ்ரீ பாலாதான் இஷ்டத்தை பூர்த்தி செய்யும் இறைவி. வாலைப் பருவத்தினளாய் வந்து, நம்மை வாழ வைப்பவள்! தாயைப்போற்றினால் மகப்பேறு, மனைப்பேறு, மணப்பேறு யாவும் சித்திக்கும். இதனை அனைவரும் பயின்று அன்னையின் திருவருளுக்குப் பாத்திரமாகும்படி அன்புடன் வேண்டுகிறோம்.)

## கூட்டுப் பாடல்

பாலா திரிபுர சுந்தரியே
பதமலர் தொழுதோம் வந்திடுவாய்
வேலா யுதனின் தாயவளே
வேதனை தீர்க்கும் தூயவளே (பாலா)

நெமிலியில் தானே நின்வீடு
நெஞ்சம் என்றும் உன்னோடு
சுமைகளை எடுத்தாய் பரிவோடு
சுந்தரி சிரித்தாய் மகிழ்வோடு (பாலா)

நீதரும் தீர்த்தம் வினைநீக்கும்
நின்பஞ் சாமிர்தம் எமைக்காக்கும்
நின்திரு விபூதி பிணிபோக்கும்
நின்திருக் குங்குமம் துணைசேர்க்கும் (பாலா)

மங்கைநின் திருவடி மங்கலமே
மாந்தர்கள் யாவரும் சங்கமமே
பொங்கிடும் மகிழ்ச்சிகள் தங்கிடுமே
பூவைநின் புகழ்தான் எங்கணுமே (பாலா)

திரிபுர சுந்தரி வருவாயே
திருவருள் தனையே தருவாயே
விரிசடை சிவனுடன் வருவாயே
வேண்டிய வரமதைத் தருவாயே (பாலா)

பாடல் : நெமிலி எழில்மணி

பாடியவர் : பத்மஸ்ரீ இசைமணி டாக்டர்
சீர்காழி எஸ். கோவிந்தராஜன்

இசை : கலைமாமணி டி.ஆர். பாப்பா

## வெள்ளிக்கிழமையிலே
## பாலாவின் கோயிலிலே

வெள்ளிக் கிழமையிலே பாலாவின் கோயிலிலே
வேதங்கள் ஒலிக்குதடி — நம்
வேண்டுதல் பலிக்குதடி

—வெள்ளிக்கிழமையிலே

மந்திர புஷ்பங்கள் மாதாவின் காலடியில்
மணம்வீசி மலருதடி — நம்
மனம் யாவும் குளிருதடி
சிந்தை அள்ளும் கவசம் — அதைச்
சொல்லச் சொல்ல இனிக்கும்
வந்தவினை தீருதடி — நல்ல
வலங்களே சேருதடி

—வெள்ளிக்கிழமையிலே

அள்ளிக் கொடுப்பதற்கு அன்னையும் இருக்கையில்
கவலைகளும் ஏதடி — அவள்
கவிதைகளைப் பாடடி
தெள்ளுதமிழ்ப் பாட்டு தேனிசையைக் கேட்டு
தேவியும் வந்தாளடி — அவள்
திருவருள் தந்தாளடி

—வெள்ளிக்கிழமையிலே

இயற்றியவர் : நெமிலி எழில்மணி
பாடியவர் : கலைமாமணி கே. வீரமணி
இசை : கந்தர்வகான ஜோதி
கே. வீரமணி மற்றும் சோமு
கேசட் வெளியீடு : சாந்தி ஆடியோஸ், வேலூர்




## என் தாயே திரிபுர சுந்தரி

என் தாயே திரிபுர சுந்தரி
தருணம் இது வந்தாதரி
தேவியன்றி யார்கதி

—என்தாயே

நீயில்லா நெஞ்சிலே
நிம்மதி வந்து சேருமோ
நீதானே எம்மை ஈன்றெடுத்தாய்
நாங்கள் உனக்கு பாரமோ
தாயின் வாக்கும் கூறுமா ? எம்
தாபம் யாவும் தீருமா ?

—என் தாயே

மனம் நின்பதத்தை தேடுதே
மகிழ்ச்சி யாவும் கூடுதே
தினம் நின்தோற்றம் காணக்காண
கால்கள் கோயில் நாடுதே
அமைதி தன்னை அருளுவாய்
நெமிலி வாழும் தெய்வமே

—என் தாயே

பாடல் : நெமிலி எழில்மணி



## நூலாசிரியர் இசைக்கவிச் செம்மல் கவிஞர் நெமிலி எழில்மணியைப் பற்றி

## சான்றோர்களின் திறனாய்வு

கவிஞர் நெமிலி எழில்மணியின் தெய்வ அருட்பாடல்களை இசைமாமணி டாக்டர் சீர்காழி கோவிந்தராஜன் அவர்கள் தமக்கே உரிய கம்பீரமான குரலில் பாடும்பொழுது கேட்டால் அப்படியே உள்ளத்தை உருக்கக் கூடியதாக இருக்கும். காரணம் கவிஞர் நெமிலி எழில்மணியின் பாடலிலே ஓசை நயமும் பொருள் நயமும் சீர்காழியின் இசை நயத்தில் மிளிரும்.

கவிஞர் நெமிலி எழில்மணி எழுதிய
"தெய்வ அருட்பாடல்கள்" என்ற நூலில்,
வானதி திருநாவுக்கரசு அவர்கள்

நாளும் அன்னை பாலா திரிபுர சுந்தரியின் அன்பிலே திளைத்து வரும் அன்புத் தம்பியாகப் பழகிவரும் அருட்கவிச் செம்மல் கவிஞர் நெமிலி எழில்மணி அவர்கள் அன்னையின் அற்புதங்களை தமக்கே உரித்தான துள்ளிவரும் செந்தமிழ் நடையினிலே சுகமான ராகங்களாகச் சுவையாகப் படைத்துள்ளார்.

"ஊருக்கெல்லாம் அவள்தான் உபகாரி — திருவேற்காட்டினிலே வாழும் கருமாரி", "மாரியைப் பொழிபவள் மாரியம்மா — துயர் மாறிடச் செய்வதும் மாரியம்மா" என்று இவர் இயற்றிய பல அம்பாள் பாடல்களை நான் பாடும்போது இசையோடு அருள் மணக்கும் தெய்வீக நிலையுணர்ந்தேன்.

கவிஞர் நெமிலி எழில்மணி எழுதிய
"திரிபுர சுந்தரி திருவிளையாடல்" என்னும் வெளியீட்டில்
பத்மஸ்ரீ – இசைமணி – டாக்டர், சீர்காழி எஸ். கோவிந்தராஜன்.